# ஆயர்பாடி அமுதம்

(புதுக் கவிதை)

திருமதி காசினி வேந்தினி இராமானுஜம்

திருநெல்வேலி ஸ்ரீ நம்மாழ்வார் சபா
D 107 - F, சங்கீதா காலனி,
அண்ணாமெயின் ரோடு, கே.கே.நகர்
சென்னை -600 078
☎ 4713969

# நூல் விவர அட்டவணை

| | | | |
|---|---|---|---|
| 1) | நூலின் பெயர் | : | ஆயர்பாடி அமுதம் |
| 2) | பொருள் | : | சமயம் |
| 3) | ஆசிரியர் பெயர் | : | திருமதி.காசினி வேந்தினி இராமானுஜம் |
| 4) | பதிப்பாண்டு | : | பிப்ரவரி, 1999 |
| 5) | பதிப்பாளர் | : | திருநெல்வேலி ஸ்ரீ நம்மாழ்வார் சபா |
| 6) | உரிமை | : | ஆசிரியர்க்கு |
| 7) | மொழி | : | தமிழ் |
| 8) | படிகள் | : | 1000 |
| 9) | தாள் | : | 14.4 kg. |
| 10) | கட்டமைப்பு | : | அட்டைக்கட்டு |
| 11) | அச்சு எழுத்து | : | 12 pt. |
| 12) | மொத்தப் பக்கங்கள் | : | 224 |
| 13) | விலை | : | ரூ. 65 |
| 14) | அச்சிட்டோர் | : | வராகி பதிப்பகம், சென்னை -18. |
| 15) | கணிப்பொறி அச்சு | : | ஈசுவர் லேசர், சென்னை -18. |

# சமர்ப்பணம்



வக்கீல் ஞான தேசிகன் பிள்ளை-கோமதி அம்மாள்.

அப்பா என்று நான் அன்புடனே அழைத்திட
தப்பாமல் இசைவு தந்த தக்க நல் மனமுடைய
ஒப்பேதுமில்லாத உத்தமருக்கும், பத்தினிக்கும்
இப்பாவே அடியேனின் இதயமது காணிக்கையே.

# அணிந்துரை

**(திரு. இரா. முத்துக்குமார சுவாமி, ஆட்சியாளர், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.)**

இந்திய நாட்டின் இரட்டைக் காப்பியங்கள் என்று கூறிப் போற்றுமளவிற்கு இராமாயணமும் மகாபாரதமும் திகழ்கின்றன. இவ்விரண்டுமே எம்பெருமான் திருமாலின் அவதாரங்களை அடிப் படையாகக் கொண்டு இயற்றப் பெற்றவையே. இராமாயணம் திருமாலின் பத்து அவதாரங்களில் ஒன்றான இராமாவதாரத்தின் சிறப்பை எடுத்துக் கூறுவதாகும். இதில் இராமன் காவிய நாயகனாகத் திகழ்ந்து முழுக் காவியத்தையும் இயக்கிச் செல்கிறார். இதுபோலவே மகாபாரதத்தில் திருமால் அவதாரங்களில் ஒன்றான கிருஷ்ணாவதாரத்தின் சிறப்பு விளக்கப் பெறுகிறது.

மகாபாரதத்தில் காவிய நாயகனாகத் தருமரைக் கொண்டாலும் அவரை இயக்குபவராகத் திகழ்பவர் கிருஷ்ண பரமாத்மாவான கண்ணபிரானேயாவர். கண்ணனில்லையேல் பாரதம் கிடையாது. துரியோதனன் - தருமர் ஆகிய இருவரிடையே நடைபெற்ற பங்காளிச் சண்டையெனப் பாரதத்தைக் கொண்டாலும் தருமத்தின் பெருமையை நிலைநாட்ட எழுந்ததே பாரதம். 'தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும், தருமம் நின்று வெல்லும்' என்ற பேருண்மையை வலியுறுத்துவது பாரதம்.

இவை இரண்டும் தசாவதாரத்துடன் தொடர்பு கொண்டன என்றாலும் அவற்றுள் சிறப்புடையதும் எல்லோருக்கும் தெரிந்ததுமான அவதாரம் கிருஷ்ணாவதாரம் என்னும் கண்ணன் அவதாரமே. அதனால் கண்ணனையே நாயகனாக வைத்து அவனுடைய தோற்றம், வளர்ப்பு யாவற்றையும் எடுத்துக் கூறுவது 'பாகவதம்' என்ற காவியமே. இது வடமொழியில் உள்ளது. இராமாயணம், பாரதம் இரண்டுக்கும் மூலம் வடமொழியில் உள்ளது. வால்மீகி இயற்றியதைத் தழுவித் தமிழில் கம்பனும், வியாசர் இயற்றியதைத் தழுவித் தமிழில் வில்லிப்புத்தூராரும் படைத்துத் தமிழுக்குப் பெருமை சேர்த்தார்கள்.

இதுபோலவே வடமொழியில் உள்ள பாகவதத்தைத் தமிழில் தர முயற்சி செய்து வெற்றி பெற்றிருப்பவர் திருமதி. காசினிவேந்தினி இராமானுஜம் அம்மையார் அவர்கள். கம்பனும் வில்லிப்புத்தூராரும் பழங்காலச் செய்யுள் நடையில் காவியங்களைப் படைத்துள்ளதால் அவற்றைப் படித்துத் தெரிந்து கொள்வது கடினமாக உள்ளது என்று கவிஞர் வாலி அவர்கள் புதுக்கவிதை நடையில் இராமகாதையை முடித்து, இப்போது பாரதத்தைப் படைத்து வருகிறார்.

இந் நூலாசிரியர் இப்போக்கைப் புரிந்து கொண்டு நேரடியாகவே புதுக்கவிதை வடிவில் பாகவதத்தைத் தந்துள்ளமைக்காக இவரைப் பாராட்டுகிறோம். காரிகை கற்று கவி பாடுவது என்பது மரபுமுறை: சொற்களின் ஆற்றலை யுணர்ந்து எதை எப்படிப் போட்டு எண்ணத்தைப் பெரிய மலையைத் தன்னகத்தே அடக்கிக் காட்டும் சிறுகண்ணாடி போன்ற புதுக் கவிதை வாயிலாகக் கவிதையை ஆழமாகப் படிக்கும் பழக்கம் இல்லாதவர்களும் படித்து ரசித்து மகிழத்தக்க வகையில் தருவது புதுக்கவிதை. இவ்வகையில் இவ்வம்மையார் பெருவெற்றி கண்டுள்ளார் என்பது போற்றுதற்குரியது.

பட்டப்படிப்பில் பாடமாகத் தமிழ் பயின்றதைத் தவிர பாட்டெழுதுவதற்கென்று பைந்தமிழ் இலக்கணத்தை இவர் பயின்றாரில்லை. இருப்பினும் பாராட்டுக் கூட்டங்களில் வாழ்வில் உயர்ந்தவர்களையும் வாழ வேண்டியவர்களையும் வாழ்த்தும்போது இவர் வாழ்த்துக்கள் வண்ணத் தமிழ்க் கவிதைகளாகவே பூத்துக் குலுங்கின.

இவருடைய வாழ்த்துப் பாக்களைக் கேட்டவர்கள் மகிழ்ந்தனர். சுவைத்துப் பாராட்டினர். இப்பாரட்டுக்கள் இவருடைய கவிதையுணர்விற்கு ஊட்டச்சத்தாய் அமைந்தன. இவையே அம்மையாரை இக்காவியம் இயற்றத் தூண்டியனவெனலாம்.

தேவகி தன் மணிவயிற்றுத் தேன் சிட்டி.ளஞ்சிங்கமான கண்ணன் சிறையில் பிறந்து கோகுலத்தில் நுழைந்து யசோதையின் அரவணைப்பில் வளர்ந்ததைக் 'கோகுல லீலை' என்னும் முதற்பகுதி கூறுகிறது.

கண்ணனுக் கேற்பட்ட இடையூறுகளைக் கண்டு அஞ்சிக் கோபர்கள் நந்தவனமாகிய பிருந்தாவனத்தில் குடி புகுகிறார்கள். பலராமன் கண்ணன் ஆகியோரின் பருவ விளையாட்டுக்கள், பிருந்தாவனத்தில் பெருமழை பெய்யக் கோபர்களைக் காப்பாற்றக் கோவர்த்தன கிரியைத் தன் சுண்டுவிரலால் தூக்கிப் பிடித்தது, கண்ணன் கோபியருடன் ஆடிய ராசலீலை, ஆகியவை நடுக் காண்டமான 'பிருந்தாவன லீலை'யில் சுவைபடப் பாடப் பெற்றுள்ளன.

இறுதிக் காண்டமான மதுராலீலையில் கண்ணன் கம்சவதம் செய்து தன் பெற்றோரைச் சிறை மீட்டதைக் கூறுகிறது.

இனிய எளிய தமிழில் ஆற்றொழுக்கான நடையில் இந்த அரும் பெரும் கண்ணன் காதை படிப்போர்க்கு அமுது. ஆயர்பாடி அமுதம் தமிழன்பர்களுக்குக் கிடைத்த திருப்பாற்கடல் அமுதம். இதனை அள்ளி வழங்கிய திருமதி காசினி வேந்தினி இராமானுஜம் போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியவர். வாழ்க அவர் தம் கவிதைத் தொண்டு.

# மதிப்புரை

(திரு. வா. திருமலை, துணைப்பொது மேலாளர் (ஓய்வு),
இந்தியன் ஓவர்ஸீஸ் வங்கி, சென்னை)

'ஆயர் பாடி அமுதம் எனும் தலைப்பில் ஒரு காவியம் கண்டேன். இதன் ஆசிரியர், திருமதி. காசினி வேந்தினி இராமானுஜம் கணிதவியலில் ஒரு பட்டதாரி. அயல் நாட்டில் ஏறத்தாழ இருபது ஆண்டுகளுக்கு மேல் பணியாற்றிய ஒரு பொறியியலாரின் இல்வாழ்க்கைத் துணை நலம். தம் கணவருடன் இந்த பூமிப் பந்தைப் பலமுறை வலம் வந்தவர்.

ஆனாலும் அவர்தம் நாடி நரம்பில் ஓடிப் பரந்துள்ளவை செந்தமிழ் மீது காதலும், செய்யுள் இயற்றும் ஆற்றலும். அதற்குக் காரணம் இவர்தம் தந்தையார் மறைந்த மாமேதை திரு. T.K. இராமானுஜக் கவிராயர் அவர்கள். கவிச்சக்கரவர்த்தி கம்பநாட்டாழ்வானைப் போன்று பாடல் புனையும் ஆற்றல் பெற்றவர். அது மட்டுமன்று, அன்னை மொழி தமிழிலும் அயல் மொழி ஆங்கிலத்திலும் அவர் பாடிய பல்லாயிரக்கணக்கான பாடல்கள் இரு பெருங்காவியங்களாக மலர்ந்து அதனைக் கற்றவர் நெஞ்சில் இன்னமும் மணம் வீசிக் கொண்டு உள்ளன.

எனவே மகளுக்கும் கவிதை பாடும் ஆற்றல் இயல்பாகவே உள்ளது. உறவினர் திருமணங்களிலும் மற்ற மங்கல நிகழ்ச்சிகளிலும் நூற்றுக்கணக்கில் இவர் பாடல்கள் அரங்கேறி உள்ளன. ஆனால் இப்பொழுதுதான் உதிரிப் பூக்களைத் தூவிய இவர்தம் நெஞ்சம், ஒரு காவிய மாலையை அழகுறத் தொடுத்து, தம் முன்னோர் போற்றிய வைணவக் கடவுள் கண்ணனின் இளமைப் பருவத்தையும் இளம்பிள்ளைக் குறும்புகளையும் விரிவாகப் பாடியுள்ளது.

மரபுக்கவிதை எழுதும் கலையை இவர் கைவரப் பெற்றாலும், காலத்திற்கு ஏற்ற வகையில் ஜனரஞ்சகமாக இருக்க வேண்டி, இதனைப் புதுக்கவிதையில் படைத்துள்ளார் என எண்ணுகிறேன்.

காலம் காலமாக இவர் பாராயணம் செய்துள்ள ஆண்டாள் பாடல்களும் மற்ற ஆழ்வார் பாடல் வரிகளும் இந்நூலில் ஆங்காங்கே காணப்படுகின்றன. காவிய நடையில் கதையை நகர்த்தும் போது, ஏற்கனவே அவர்தம் சிந்தையில் பதிந்துள்ள திவ்ய பிரபந்தப் பாடல் வரிகள், இவர்க்குப் பக்க பலமாக கை கொடுக்கும் காட்சியைக் காணமுடிகிறது.

கம்ச வதத்துடன் காவியத்தை முடித்து விட்டாலும் தொடர்ந்து நூல் படைக்கும் பணியில் இவர் ஈடுபடுவார் என்பது என் நம்பிக்கை. ஈடுபட வேண்டும் என்பது என் வேண்டுகோள்.

தலைப்பிலேயே அமுதத்தைப் பெய்துள்ள இவர் தொடர்ந்து அதனை நூல் முழுதும் பரிமாறியுள்ளார்.

இவர் முயற்சி வெல்க; மேலும் வளர்க என வாழ்த்துகிறேன்! அதற்கான வயதும் எனக்கிருக்கிறது; வாழ்த்துவதற்கு என் தமிழும் கை கொடுக்கிறது.

# நன்றி உரை

ஆடுவதும் நீ ஆடும் நிலை பலவும் நீ – எனை
ஆட்டுவிக்கும் ஆசானும் ஆண்டவனும் நீ
பாடுவதும் நீ என்பாட்டதுவும் நீ – என்
பாட்டதன் பொருள்நயமும் சுவையதும் நீ

இது 1985ம் ஆண்டு ஜீலை மாதம் ஒன்றாம் தேதி நான் லிபியாவில் என் கணவருடனிருந்த பொழுது எழுதப் பெற்ற பாடலின் முதல் நான்கு வரிகள். என் ஆசானும் கண்ணன், ஆண்டவனும் கண்ணன். நான் சிறுமியாய் இருந்தபோதே என் உள்ளத்தில் பதிந்தவன் ஏழுமலை இறைவன். ஆசானாய், ஆண்டவனாய் அமைந்த இறைவன் என்னுள் இருந்து எப்பொழுதும் இயக்கினான்.

இந்நூலை என்னை எழுதச் செய்தவர் தமிழுக்கும் வைணவத்திற்கும் தக்க தொண்டாற்றியபடியே தன்னை மறைத்து வாழும் திருவாளர். திருமால் பெரும் புகழை நாடக முத்துக்களாக்கி நமக்களித்த எழுத்தாளர், உயர்திரு. டி.பி. இராமானுஜம் அவர்கள். ஒருநாள் அவர்கள் கேட்ட கேள்வி ஒன்று உறங்கிக் கிடந்த என்னை உலுக்கி, உள்ளிருப்பவனை எண்ண வைத்தது. கருணைக் கடலான கண்ணனைப் பாட என்னால் கூடுமா?; எதைப் பாட?; எதை எழுத? என நான் யோசிக்கவே இடமில்லாதவாறு ஸ்ரீ இராமகிருஷ்ண மடத்தி லிருந்து வெளியிடப்பட்ட பாகவதத்தை எனக்கு அளித்துப் பூரண அவதாரனான புண்ணியன் கதையை எழுதத் தூண்டிய அருமை, குறிப்பாக இந்நூல் உருவாக உத்வேகம் தந்த பெருமை முற்றும் திரு. டி.பி. இராமானுஜம் அவர்களையே சாரும். தமிழை, தமிழ் இலக்கணத்தைத் தெளிவாகக் கற்றறியாத என்னைத் தட்டிக் கொடுத்துத் தைரியமளித்துக் குற்றங்குறைகளைச் சுட்டி அகற்றி என் முயற்சிக்கு உறுதுணையாக நின்று இந்நூல் உருவாக உதவி இருக்கிறார் என்றால் அது மிகையன்று. ஏனெனில் அதுதான் உண்மை. இறைப்பணியில் என்னை ஈடுபடுத்தி நம் தமிழன்னையின் தாளிணைக்குப் புதுக்கவி மலர் தூவச் செய்த திரு டி.பி. இராமானுஜம் அவர்களுக்கு என் இதயம் நிறைந்த நன்றியைப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் கருவிலேயே கவிதையைச் சேர்த்த, காந்தி காவியம் முதல் பல்லாயிரம் பாக்களால் மாலவனை மனமார வழுத்தி வாழ்ந்த எந்தை, கவித்தென்றல், உயர்திரு டி.கே. இராமானுஜக் கவிராயர் அவர்களை இப்பொழுது என்னால் நினையாமல் இருக்க முடியாது. அன்னாரை என் மனமார வழுத்தி வணங்குகிறேன்.

திருக்குறளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தும், பல நூல்கள் இயற்றியும் புகழ்கண்ட என் அண்ணன் உயர்திரு டி. ஆர். கள்ளப்பிரான் அவர்கள், சிறுவயது முதலே என் கவிதைகளைப் படித்து ஊக்குவித்துக் கவிதைப் பூங்காவில் சிறு கொடியாகப் படர உரமிட்டு வளர்த்து விட்டவர்கள். அவர்களுக்கு என் மன மார்ந்த பணிவன்பான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்பணி இடையூறின்றி நிறைவேறப் பலவகையாலும் எனக்கு உறுதுணையாக நின்று ஒத்துழைப்பும் உற்சாகமும் அளித்த என் கணவர், உயர்திரு லிபியா இராமானுஜம் அவர்களுக்கும், இறையருளால் இந்நூல் உருவாகத் தம் பங்கினை நேர்த்தியாகச் செய்த என் இரு மைந்தருக்கும் என் அன்பு கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழன்னைக்குத் தாள் முதல் முடிவரை அணிபுனைந்து அலங்கரிக்கும் ஆற்றல் மிகுந்தவர்; தமிழ்த் தொண்டில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவர்; தமிழ்ச் சான்றோர் நாடும் நல்லவர்; வல்லவர்; சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர், உயர்திரு. இரா. முத்துக்குமாரசுவாமி அவர்கள் அன்புடன் மனம் உவந்து இந்நூலுக்கு அணிந்துரை அளித்து என்னை வாழ்த்தி யுள்ளது, தமிழன்னையின் தாலாட்டைக் கேட்ட மதலையின் நிலையை எனக்களிக்கிறது. அவர்களுக்கு என் பணிவன்பான நன்றி கலந்த வணக்கங்களைச் சொல்வதில் மகிழ்ச்சியடைகிறேன்.

அருமையாய் ஆங்கிலத்திலும் இனிமையாகத் தமிழிலும் எப்போது யார் அழைத்தாலும், இடத்திற்கும், காலத்திற்கும், பொருளுக்கும் தகுந்தாற்போல சுவைபடப் பேசும் வல்லமையும், தெளிவும், புலமையும், திறமையும் சிறப்புமுடைய

உயர்திரு திரு. வா. திருமலை அவர்கள் எளியேனின் நூலுக்கு மதிப்புரை வழங்கி வாழ்த்தி இருப்பது, தவழும் குழந்தைக்கு நடை கற்றுக் கொடுப்பது போன்ற பாவனையை எனக்களிக்கிறது. அவர்கள் வாழ்த்தியது போல ஆயர்பாடி அமுதம் பூரணாவதாரப் புண்ணியனாக வளர இறை குரு தாள் பணிந்து என் உளமார்ந்த நன்றியை அவர்களுக்கு வணக்கமுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை நல்லமுறையில் அச்சிட்டு வெளியிட்டவர்கள் வராகி அச்சகத்தார். இவர்கள் வாமனனின் திருத்தொண்டில் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட புண்ணிய சீலர்கள். இந்த வைணவப் பண்ணையில் மலர்ந்த மலர்கள் பலப்பல. அவை தம் வண்ணத்தால் தமிழ் மணத்தால் இந்த வையகத்தைத் தம்பால் ஈர்க்கும் வசீகரம் கொண்டுள்ளன. தமிழும் வைணவமும் பூத்துக் குலுங்கும் இந்தப் பண்ணையில் இந்நூலை அச்சிட்டுத் தந்ததால் இப்பண்ணையின் உரிமையாளர்கள் திருவாளர்கள் பாலசுப்பிரமணியன் சங்கரவடிவு தம்பதியருக்கு நிறைந்த மனதுடன் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அருளோடு பொருளையும் அள்ளித் தருபவன், நம்மை ஆள்பவன். நம்மை ஆட்டுவிக்கும் அவனே இந்நூல் அச்சிலேற அனுக்கிரகம் பண்ணி இருக்கிறான். ஏழுமலையானை எண்ணித் தொழுபவர்க்கு ஏது குறை?; என்ன குறை?; எங்கு குறை?; என் குறையெல்லாம் களைந்து, மறை மூர்த்தி கண்ணன் நிறைவாகப் பொருளுதவி நின்று செய்யும் அருள் நினைந்து, அவன் பாத கமலங்களில் தலை பதிக்கின்றேன். ஆம்! திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் இந்நூலை அச்சிட்டு வெளியிடப் பொருளுதவி செய்து ஆதரித்துள்ளார்கள். அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உதவி செய்யும் உத்தமரைத் தக்க தருணத்தில் சுட்டிக் காட்டித் திருமலை திருப்பதி தேவஸ்தானத்திலிருந்து பொருளுதவி பெற்றுத் தந்த பண்பாளர் உயர்திரு. டி.ஆர். கள்ளப்பிரான் அவர்களுக்கு மீண்டும் என் நன்றியைப் பணிவோடு கூறிக் கொள்கிறேன்.

*எனக்கு ஊனும், உயிரும், உணர்வும் கொடுத்து, ஆயர்பாடி அமுதமெனத் தன்னை நான் அனுபவிக்க அருளிச் செய்த அற்புதனை, சற்குருவை நினைந்து வியந்து மகிழ்ந்து நன்றி கூறி அஞ்சலி செய்கின்றேன்.*

*ஆயர்பாடி அமுதத்தை அள்ளிப் பருகும் அனைவருக்கும் என் நன்றி.*

ஆசிரியர்

திருமதி காசினி வேந்தினி இராமானுஜம்

'தேசிகராம்'

D.107 F சங்கீதா காலனி,

அண்ணா மெயின் ரோடு,

கே.கே.நகர்

சென்னை - 78.

# ஆயர்பாடி அமுதம்

## கடவுள் வாழ்த்து

உள்ளவன் உலகெனும்
　　உருவமாய் அருவமாய்
உள்ளவன் நீர் நிலம்
　　காற்றிலும் கனவிலும்
உள்ளவன் உள்ளத்து
　　உணர்வு ஒலியாகவும்
உள்ளவன் திருவடி
　　உள் நினைந்து பணிந்தேன்.

விரிந்திடும் விண் வெளியை
　　விட்டிலும் அளந்திடவே
விருப்பமே கொண்டதுபோல்
　　வில்ராமர் சேது கட்ட
உதவிய அணில் போல் யானும்
　　உள் மனம் துணிந்து அன்பால்
உத்தமக் கண்ணன் கதையை
　　உரைக்கின்றேன் பணிவுடனே.

பாகவதம் எனத்திகழும்
　　பகவானின் கதையமுதம்
மோகமதை நீக்கி யருள்
　　மோட்ச வழி தனைக் காட்டும்
நாகமெனப்படும் கலியாம்
　　நச்சினை நீக்கும் மருந்தாய்
பாகெனத் தீஞ்சுவை நல்கும்
　　பரம்பொருள் சரிதம் காண்போம்.

# கோகுல லீலை

## பூதேவி அயனிடம் சரணடைதல்

புவியினைத் தாங்கும் தேவி
        பெருஞ்சுமை தாங்க வொண்ணாத்
தவிப்பினால் தளர்ந்து போனாள்
        தரணியை ஆள்பவர்கள்
அரசராய் இருந்தும் குணத்தால்
        அசுரராய் ஆட்டம் போட
அரணென அடைந்தாள் அன்னை
        அயன் திரு அடிகளையே.

அயன் அவள் கூற்றை யேற்று
        அகத்தினில் இருத்திக் கொண்டு
அன்னை பூதேவி, தேவர்
        அரன் முதலானாரோடும்
புயவலி மிக்க புரு
        ஷோத்தமன் துயின்றிருக்கும்
புகழுடைப் பாற்கடலாம்
        புண்ணியக்கரையடைந்தான்

அகத்தின் உள் பொலிந்து
        அகிலத்தை ஆட்டுவிக்கும்
அகிலத்தின் நாயகரும்
        அனைத்துமேயான வாசு
தேவரின் திருவடியைத்
        திரிந்திடா மனதால் ஒன்றித்
தியானித்துப் புருஷஸீக்தம்
        திருந்தவே மொழிந்து பணிந்தான்

## பிரமன் அசரீரி வாக்குக் கேட்டல்

அயன் சமாதி நிலையில்
அசரீரி வாக்கு ஒன்று
ஆகாயத்தில் ஒலிக்க
ஆவலாய் அதனைக் கேட்டான்
“பரம புருஷர் ஆணை இதைப்
பாங்குடன் கேட்டுக் கொள்க
அரவணைத் துயின்றான் ஆணை
அதன்படி விரைந்து நடப்பீர்

பூதேவியின் மனக்கவலை
புருஷோத்தமன் அறிவார் நும்
புண்ணிய பலனுக்கேற்ப
புகழ்யது குலத்தில் தேவர்கள்
பிறவி பல எடுத்துப் பரப்
பிரம் மமாம் கோமான் வந்து
பூபாரம் நீக்கும் மட்டும்
பூமியில் இருக்க வேண்டும்

பண்புடைய வசு தேவன்
பக்தி மிகுந்தான் மகனாய்
அன்புடன் அவதரிக்க
அண்ணல் திரு உள்ளம் கொண்டார்.
ஆகவே அவருடனே
அழகிய தேவ மங்கை
அனைவரும் பிறக்கட்டும்
அகிலத்தில் என்று சொன்ன

## பிரமன் தேவர்க்கு ஆணையிட்டுத் தம்மிடம் செல்லுதல்

அசரீரி வாக்கை ஏற்று
அமரருக்கு அறிவுறுத்தி அயன்
அவ்வாறே நடக்கச் சொல்ல தேவர்
அனைவரும் சம்மதிக்க
அகிலத்தின் தாய் குளிர
அன்பு நல் வார்த்தை சொல்லி
அனுப்பிய பின்னர் தாம் தம்
அயனுயர் உலகடைந்தார்.

## சூரசேனன் மன்னன் மதுராபுரியைத் தலைநகராகக் கொண்டது

யதுகுலத் தலைவன் சூர
சேனன் மதுராவிலிருந்து
மதுரையையும் அது சார்ந்த
நாடுகளையும் ஆண்டிடவே
மதுராபுரியினிலே
ஹரி நித்ய வாசம் செய்ய
யதுகுல மன்னர்க்கது
தலைநகராய் விளங்கியது

## வசுதேவர் தேவகியை மணந்து புறப்படல்

சூரசேனன் மைந்தன்
வசுதேவர் ஓர் நன்னாளில்
சுந்தரத் தேவகியைத்
தாம் மணந்து புறப்படவே
உக்கிரசேனன் மைந்தன்
உறவால் அண்ணனான கம்சன்
உன்னத நற்தேரேறி
ஓட்டுகின்றான் உவப்புடனே

## கம்சனுக்கு அசரீரி எச்சரிக்கை

தேவகியின் தேர்ஓட்டும்
தேரோட்டி கம்சன் மனம்
திடுக்கிடவே அசரீரி
திருவாக்குக் கேட்டதிர்ந்தான்
"அறிவிலியே தேவகிக்காய்
அவள்ரதம் ஓட்டுகின்றாய்
அவள் எட்டாவது கர்ப்பம்
அது வந்து உன்னை அழிக்கும்."

## கம்சன் மன மாற்றமும், வசுதேவர் சமாதானமும்

அசரீரி சொல்கேட்டு
அதர்மமாய்க் கம்சனுமே
ஆத்திரமாய் போஜகுலம்
அவலமே காணும்படித் –தன்
அங்கை கொண்டு தங்கை
அழகு முடி பற்றி அவள்
அங்கத்தை அரிந்திடவே
ஆவேசமாய் வாளெடுத்தான்

இங்கித மற்றுக் கம்சன்
இரக்கமு மற்றுத் தன்
இளையவளைக் கொல்ல வாளை
இடை எடுத்த வேளையிலே
பங்கமில்லா மனத்தவராம்
பண்பாளர் வசுதேவர்
பக்குவமாய் நல்வார்த்தைப்
பார்த்துச் சொன்னார் கம்சனிடம்

களங்கமில் போஜகுலக்
கண்ணியம் தனைவளர்க்கும்
கம்சனே சூரர் போற்றும்
கதிரனையாய் நீரே இன்று

மணம் முடிந்து செல்லுகின்ற
　　மங்கை உன் தங்கைக்கு
மரணமளிப்பது இந்த
　　மண்ணுலகில் நியாயமாமோ?

இளமங்கை நும் தங்கை
　　எழில் மங்கள வடிவினள்
இவள் சிறுமி உமதருமை
　　இளமகளுக் கொப்பாவாள்
ஏழைகட்கு இரங்குபவரே
　　இவளை நீர் கொல்லுவது
ஏற்புடைய தன்று இதனை
　　எண்ணிப் பார்த்திடுவீர்

இன்னும் சொல்கின்றேன்
　　இனிய சித்தத்தீர்
இவளால் உமக்கு
　　எமபயம் ஏதுமில்லை
இவள் புத்திரனால் உமக்கு
　　எம பயம் என்பதாலே
இவள் மைந்தர்களை நீரே
　　எடுத்துக் கொள்ளும் என்றார்

### வசுதேவர் தேவகியுடன் தன்மனை சேருதல்

வசுதேவர் கூற்றால் கம்சன்
　　வஞ்சக மனம் மாறித் தங்கையை
வதம் செய்வதை விடுத்து
　　வாளைத் தன் உறையிலிட்டான்.
வசுதேவர் தேவகியை
　　வதைக்காமல் விட்ட அவனை
வாயார வாழ்த்திப் பின்
　　வந்தடைந்தார் தம் மனையை.

## நாரதர் கம்சனிடம் கூறியது

நாரதர் கம்சனிடம்
நந்தர் முதலான
கோபர்களும் அவர்குலமும்
கோமான் வசுதேவருடன்
தேவகியும் விருஷ்ணிகளும்
யாதவ குலத்தினரும்
தேவதைகள் திருநிறை
அவதாரம். மாறாக

கம்சனுடை குலம் நட்பு
கனசுற்றம் பரிவாரம் அவன்
அம்சமாய்ச் சார்ந்ததெல்லாம்
அசுரர் அவதாரமென்றும்
அசுரர் தமை அழித்து
அவனியின் பாரம் குறைக்க
வசுதேவர் மகனாக விஷ்ணு
வரும் நிகழ்ச்சி தனையுரைத்தார்.

## கம்சன் தன் தந்தையைச் சிறையிட்டு ஆட்சியைக் கைப்பற்றுதல்

அந்தகர்கள் போஜர்கள்
யாதவர்கள் அனைவருக்கும்
அரசனாய் இருந்து நாட்டை
ஆண்ட உக்கிரசேனனை
ஆட்சியிலிருந்து நீக்கி
அவரைக் கடும் சிறையிட்டு
அரசனாய்க் கம்சன் ஆண்டான் தன்
அத்தனின் நாடுதன்னை.

## வசுதேவர் தேவகியைக் கம்சன் சிறையிடல்

நாரதர் சென்றதும்
நச்சு மனம் கொண்ட கம்சன்
யாதவர் யாவரும்
தேவதையர் தன் தங்கை
தேவகியின் கருவெல்லாம்
தனைக் கொல்ல வரும் விஷ்ணுவென
தேவகி வசுதேவரை
விலங்கிட்டுச் சிறை வைத்தான்

## தேவகியின் முதல் மகவை வசுதேவர் கம்சனிடம் எடுத்துச் செல்லுதலும் கம்சன் பதிலும்

தேவதைக் கொப்பான எழில்
தேவகி நல்லாளும்
திகழ ஆண்டொன்றில்
பெற்றெடுத்தாள் நன் மகவை
கோல எழில் துலங்கும்
குறு நிலவாம் தன் மகவைக்
கொடுத்த வாக்கு தனை மாறாக்
குணத்தாலே நல் மனதுடைய

ஞானியராம் வசுதேவர்
நலிந்த உள்ளத்துடன்
நாடாளும் கம்சனிடம்
நயந்தளித்தார் தம் மகனை
கிள்ளையென வந்தவனாம்
வசுதேவர் முதற்பிள்ளை
கீர்த்தி மைந்தனைக் கண்டு
கம்சன் மகிழ்ந்துரைப்பான்

“மைத்துன, வசுதேவா
மனமகிழ்ந்தோம் உம்வாக்கு
மாறாத சமத்துவ
புத்தியினால், சத்தியத்தால்
இம் மகவால் எமக்கு
எமபயம் ஏதுமில்லை உம்
எட்டாவது கர்ப்பத்தால்
என் சாவு என்றதாலே

எடுத்துச் செல்வீர் உம்மகவாம்
இளம் குருத்து மைந்தனையே”
என்றதும் வசுதேவர்
எடுத்துச் சென்றார் தம் மகவை
என்றாலும் கொடியவனாம்
தன்னடக்க மில்லாத
இயல்புடைய கம்சன் சொல்
ஏற்று மனம் மகிழ வில்லை

## கம்சன் மனம் மாறி தேவகி வசுதேவர் பெற்ற சிசுக்களைக் கொல்லுதல்

குறைமதியோர் தங்களுடைய
குற்றத்தை உணராதார்
குறையாத ஆசையினால்
கொடுங்கோலராகிவிடுவர் — முன்பு
முறையாகத் தாம் கொல்ல
மறுத்த முதல் சிசுவோடு
முறை கேடாம் துர்மதியால்
மூர்க்கன் கொன்றான் பின் ஐந்தினையும்

## கம்சனின் ஆதரவாளர்கள்

பிரலம்பன் பகன் சாணூரன்
திருணாவர்தன் கொடிய
பேராளன் மஹாசனன் முஷ்டிகன்
அரிஷ்டன் த்விவிதன்
பூதனை கேசி தேனுகன்
பாண்டி நரகாசுரன்
பூதலத்து மகத மன்னன்
ஜராசந்தன் ஆதரவால்

## கம்சனின் கொடுங்கோலாட்சி யாதவர் வேறிடம் செல்லுதல்

தூயநல் யாதவருக்குத்
துன்பம் பல செய்தான் கம்சன்
ஆதலினால் யாதவர்கள்
அவ்விடம் தனை விட்டுப்
பாஞ்சாலம் குருகேகயம்
சால்வம் விதர்ப்பம்
பாங்குடைய கோசலம், நிஷதம்
விதேகம் சென்றடைந்தார்

## ஆதிசேஷன் அவதாரம் எடுக்கும் முன் நிகழ்ந்தவை

உடன்பட்டோர் கம்சனுடன்
உறவாகச் சேர்ந்து வாழ
ஒவ்வொன்றாய்த் தேவகியின்
மகவாறும் தான் மாளப் – பாற்
கடல் துயிலும் பரந்தாமன்
அணையாகும் ஆதிசேஷன்
உடலாக உருவெடுக்கும் காலம்
உகந்து கனிந்ததுவே

அனைத்துயிரின் கருவாகும்
அருளாளன் திருமார்பன்
தனை அரணாக எண்ணி வாழும்
தக்க யாதவருக் கிரங்கி
பிணியெனவே யாதவர்க்குப்
பயமளிக்கும் கம்சனைவெல்ல
மணிபுனைந்த மங்களையாம்
மாயை யோக மாதை நோக்கி

“ஆவினமும் ஆயர்குலமும்
அழகுறவே பொலிந்திருக்கும்
ஆயர்பாடி தனைத் தேடி
அணங்கே நீ செல்ல வேண்டும்
அங்கு வசுதேவரின் மனைவி
அன்னை ரோகிணி வாழுகின்றாள்
அதுபோல யாதவர் பலர்
அவ்விடங்களிலே வாழுகின்றார்

எம் அம்சமான சேஷன் தேவகியின்
ஏழாவது கருவாய் ஆகி
இருக்கின்றான். அவனை எடுத்து
ரோகிணியின் கருவாக்கு,
என் கலையின் பகுதிகளோடு
தேவகியின் மைந்தனாக
யான் பிறக்கையில் நீ
யசோதையின் மகவாகுக

வேண்டும் வரங்களை அளிப்பவளே—புவி
விரும்பும் வரங்களுக்கு ஈஸ்வரியே. இனி
யாண்டும் உன்னை மனிதரெல்லாம் உருகி
வேண்டி உபசாரங்கள் செய்து மகிழுவர்

துர்க்கை பத்ரகாளி விஜயா வைஷ்ணவி
தூயகுமுதை சண்டிகை கிருஷ்ணா மாதவி
கன்னிகை மாயை நாராயணி ஈசானி
காரிகை சாரதாம் பிகையாய் கும்பிடுவர் – கோயிலிலே

தேவகியிடமிருந்து உன்னால்
ஆகர்ஷணம் செய்யப்பட்டு
தேவி ரோகிணியிடம் பிறக்கும்
சேஷன் சங்கர்ஷணன் எனவும்
உலகிற்கு இனியனாகும்
தன்மையினால் ராமன் எனவும்
உடல்வலிவால் பலபத்திரன்
எனவும் அழைக்கப் பெறுவான்"

## யோக மாயை அச்சுதனின் ஆணையை நிறைவேற்றுதல்

அச்தனின் அருள் ஆணை
இவ்வாறென்றெனவே
அறிந்த தேவி யோக
அருள் மாயை யானவளும்
கச்சிதமாய் அரி சொன்ன
கருத்துப் படி எல்லாக்
காரியமும் கணக்காகத்
தானாற்றி முடித்தாள்

## பூபாரம் குறைக்க மாலவன் சிறையில் நிகழ்த்தியவை

ஈதொன்று மறியாத எளிய மாந்தர்கள்
இனிய தேவகியின் கர்ப்பம் கலைந்ததெனக்கருத
உயிருக்குள் உயிராக உலவும் பரந்தாமன்
உலகத்தின் பாரத்தைக் குறைக்கும் நிமித்தமாய்

தம் அம்ச பாகத்தால்
அருமை வசுதேவர்
தம் இனிய மனதினில்
தாம் வெளிப்பட்டு நின்றார்
தன்னிகரில்லாப்
பரந்தாமன் திருவொளியைத்
தாம் வாங்கிக் கொண்டதனால்
வசுதேவரும் பொலிய

தன் ஆத்மாவோடு தரணி ஆத்மனுமான
தக்க நிறை மங்களையாம் அச்சுதனின் தனிக்
கலையை தாங்கும் கீழ்த்திசை தண்மதிக் கலை எனத்
தையல் தேவகி தன் மனதில் தரித்தாள்

தமையனது வீட்டினிலே
தளிர்க்கொடியாம் தேவகியும்
தரணிக்கு உறைவிடமாம்
தாமோதரனுக்கு
தான் உறைவிடமாகிக்
குடத்திலிட்ட விளக்கெனத்
தாமில் வஞ்சகனின்
சிறையிலே தானிருந்தாள்

## தேவகியின் எட்டாவது கர்ப்பம்

கருவினிலே கடவுளைச்
சுமக்கும் தவப்பேற்றினால்
காரிகையாம் தேவகி
பொலிந்தொளிருவதைக்
கண்ட கம்சனாம்
கொடியனும் தனைக் கொல்லும்
கர்ப்பம் இதுவெனக்
கொண்டனன் மனதில் ஐயம்

## கம்சனின் நிலை

நின்றாலும் இருந்தாலும்
படுத்தாலும் புசித்தாலும் – வெளியே
சென்றாலும் எங்குமே
ஸ்ரீதரன் மயமாக
நன்றாக அவனையே
தான் நினைந்த காரணத்தால்
குன்றாகக் கொடிய மனம்
கொண்ட கம்சன் கண்டு மருண்டான்

## தேவர்கள் தேவகியின் கருவான திருமாலைத் துதித்தல்

அயனோடு அரனும் நாரதரும் மற்றும்
அமர உலகத்து நாயகரும் பிறரும்
தேவர்கள் பரிவாரங்கள் தம்மோடு தங்கள்
தேவையை நிறைவேற்றும் தேவனை நோக்கி

"உண்மைப் பரம் பொருளே – அவ்
உண்மை அறிந்தவரால்
உணரப்படும் பொருளாய்ப் புவி
உயிரினுள் இருப்பவரே இந்த

உலகியல் உணர்விற்கப்பால் – நீர்
ஒடுங்கிப் பொலிபவரே
உம்மைச் சரணடைந்தோம் ஹரியே
உம் விழிக் கருணை பெற

இப்பழம் பெரும் புவி மரமோ
இடமொன்றாய்ப் பழமிரண்டாய்
இதன் வேர்கள் மூன்றாக
இதன் ரசங்கள் நான்காகி

விழுதுகள் ஐந்தினோடும்
வித்து உயிர்நிலை ஆறும் கொண்ட
கோசங்கள் ஏழுடனே எட்டுக்
கிளைகளும் தான் கொண்டு

துவாரங்கள் ஒன்பதுடன்
துளிர் இலையது பத்தது வாய்
இதன் மேலே வீற்றிருக்கும்
இரு பறவையுடன் விளங்கும்

ஐம்புலன் அடக்கியவர் உனை
அரியென்று அறிந்த மகான் – உன்
திருவடித் தாமரையாம் – தூய
திருவடித் தெப்பத்தினால் தம்

பிறவிப் பெருங்கடலை – ஒரு
பிழையின்றித் தான் கடந்து –நும்
பாதார விந்தத்தினை இங்கு
பதித்து விட்டுச் சென்றார்

இன்னும் சில பேதையர் தாம்
எய்திய நிலை முக்தியெனும்
எண்ணமே தான் கொண்டு – உனை
எண்ணாதிருந்து வீழ்ந்தார்

தோன்றலும் அழிவு மில்லாத்
தூயநற் பேரருளே நீர் புவி
தோன்றிடும் காரணத்தை எம்
துவளும் மதியாலறியோம்

பிறந்திருந்து மடியும் பிரமையே
பேதை மானிடர்க் கென்றால் நீ
புரிந்திடும் லீலைகளும் அதன்
பொருள் பொருத்தம் அறியோம்

மீன் முதல் அவதாரம் பல
　　மேதினியில் எடுத்துப் பலர்
ஆணவம் தனையழித்து எம்மை
　　அன்புடன் காத்தவரே இனி

பூதலத்தில் அசுரர்கள்
　　பெருங்கூட்டத்தை நீரழித்து
பூதேவியின் பாரம் நீக்கிப்
　　பரிந்தருள்வீர்" என்றார்

### தேவர்கள் தேவகியிடம் சொன்னது

"தேவகிப் பெருமாட்டி
　　தேவ தேவனாம் ஸ்ரீ ஹரியே
தேவகி மைந்தனாக, யது
　　குலத்தினைக் காத்திடுவார்

தேவகி உன் மைந்தன்
　　தீய கம்சனை வதம் செய்வான்
தேவகி ஆதலினால் அச்சம்
　　தீர்ந்துமே இருப்பாய்" என்றார்

### அச்சுதனின் பிறப்பும் காலத்தின் சிறப்பும்

அச்சுதன் அவதரிக்கும்
　　அந்த நல் வேளையிலே
அயன்குறித்த விண்மீனாம்
　　அழகு ரோகிணி உதயமாக
கோள்களும் தாரகையும்
　　குளிர்ந்தே சாந்தமாக
காலமும் நற்குணங்களுடன்
　　கனிந்தது மங்களமாய்

திசைகள் தெளிவுற்றுத்
திக்கெல்லாம் பொலிந்திருக்க
விண்மீன்கள் சுடர் பரப்ப
வியனுலகம் திகழ்ந்ததுவே.
தாமரையால் அழகு பெறும்
தெள்ளிய நீர்நிலை நதியும்
தன்நிறைவாய்ச் சோலை மலர்
தாமெங்கும் மணத்திருக்க

தும்பியுடன் பறவையினம்
துள்ளலோடு பண்பாட
சுகந்த மென் மணமுடனே
சுத்தமான காற்று வீச
தூயவர்கள் தொழுகின்ற
தூய நெருப்புக் குண்டத்தில்
தூங்கியே கிடந்த நெருப்பு
தூய்மையாய் ஒளிர்ந்ததுவே!

நிமலன் நிர்மலன்
நிலத்திடைத் தோன்றும் போது
நித்திய சாதகர் மனம்
நிர்மல மானதுவே
விண்ணுலகில் துந்துபி
விளங்கி முழங்கிடவே
வியனுலகில் வந்துதித்தான்
வித்தகனாம் பிறவியிலான் !

கந்தர்வர் கின்னரரும்
களித்து மனம் பாடினார்கள்
சிந்தையொன்றிக் சாரணரும்
சித்தருமே துதித்தார்கள்
நல்வித்தை யாவும் கற்ற
நங்கையர் நடம் புரிந்தார்கள்
நடுநிசியாம் போதினில் புவி
நாயகன் பிறந்த போது

விலையில்லான் வேதத்தின்
        வித்தாகிச் சத்தாகும்
கலை எழிலான் கார்முகில்
        வண்ணன் பிறந்தபோது
நிலையாகும் விண்ணுலகில்
        நின்று தேவர் முனிவருமே
மலையெனவே மலர்பொழிய
        மஞ்சு மெள்ள முழங்கியதே !

அச்சுதன் தேவகி மைந்தனாகப் பிறந்தது
கிழக்கில் சந்திரன் உதித்தாற் போன்றிருந்தது

அகிலத்தில் அனைவரின்
        அகக் குகையிலுறையும்
அச்சுதன் தேவகியை
        அன்னையாக்கிப் பிறந்தது
காசினி இருளைப் போக்கும்
        கதிரவன் எழும் கிழக்கில்
மேதினி இருளில் தோன்றும்
        மதியது பிறந்த தொக்கும்

வசுதேவர்-தேவகி கண்ட குழந்தையின் தோற்றம்

கண்களிரண்டும் இரு கமலங்களாய்
        கரங்கள் நான்கு உடையவராய்
கதை, சங்கு சக்கரம் யாவும் தாங்கும்
        கார்முகில் வண்ண எழில் மேனி

திருமரு தாங்கும் மார்புடனே
        திருத்துழாய் மாலை தனையணிந்து
அழகிய நவமணித் திரள் புனைந்து
        அதன் ஒளி படரும் சிகை ஒளிர

மஞ்சள் பட்டாடையோடு
மாண்புடைப் பீதாம்பரமும்
மணி அரைஞாண் குலுங்க
தோள் வளை கங்கணமும்
மகரக்குண்டலம் அசைய – நவ
மணிக்கிரீடம் தான் தரித்து
மால் குழந்தை வடிவாகி
மயக்கும் எழிலோடிருந்தான்

வசுதேவர் களிப்பும் மனதால் தானம் செய்தலும்

குழந்தை பிறந்ததால்
குதூகலமுற்று
குற்றமில் வசுதேவர்
குன்றெனத் தான் மகிழ்ந்து
அன்புடன் மனதால்
அந்தணர் பலருக்கு
ஆயிரம் பசுக்களாம்
ஆனிரை தானம் செய்தார்

தெள்ளிய அறிவுடைய
தேவகியின் கொழுநன் – தான்
அள்ளிடும் மகவு பாம்பு
அணைதுயில் மால் எனவே
உள்ளிலே உணர்ந்து உவகை
ஊற்றெனப் பெருக பயம்
தள்ளியே வைத்து இறை
தாளிணைப் பணிந்து சொல்வார்.

வசுதேவர் குழந்தை மாலிடம் கூறியது

**அறிவு அனைத்திற்கும் அத்தாட்சியாகிய**
**அனுபவ ஆனந்த அருள் வடிவுடையவ !**
**முக்குண இயல்புடைய புவியைப் படைத்த –நும்**
**மூலாதாரம் புவி முற்றுமாய்க் கலந்து**

இருப்பதால் நீருமிங்கு
        இருப்பதாய்த் தோன்றும்
இனியவ நீ என்
        எழில் மகவாகினை,
உருவிய வாளுடன் கம்சன்
        உனைக் கொல்ல வருவான்
உனக்கு முன் ஆறு
        உயிர்களைக் கொன்றவன்

## தேவகியின் மகிழ்ச்சியும் பயமும்

என்றலும் தேவகி இறை அம்சமுடன்
எழிற்துலங்கும் தன் இள மைந்தனை நோக்கி
ஆசை குணங்கள் அனைத்துமே அற்ற
ஆதியே, சோதியே அனைத்துமாம் பிரம்மமே

என்றும் இருப்பவரே
        என்முன்னே தோன்றிய நீர்
இணையிலா அணையா விளக்கே
        இருடி கேசவன் நீரே
மஹாபூதங்கள் சூக்கும பூதத்துள்
        மறைந்து ஒடுங்கும் போது
மஹாவிஷ்ணுவே சேஷன் நீர்
        மட்டுமே எஞ்சி இருப்பீர்

உக்கிரசேனன் மைந்தன்
        உன்மாமன் கம்சனால்
ஊறு உனக்கு விளையுமென்று
        உள் அஞ்சுகிறோம் நாங்கள்
உலகனைத்தும் உள்ளடக்கிய
        ஒருருவே என் மகவாய்
உதித்தவனே உன் ஒளிர்மேனிக்கு
        ஒப்பேதும் இல்லை அதை

மனதூன மானவர்கள்
        மைந்த உன்னைக் கண்டு தம்
மனம் வெகுண்டு உனைக் கொல்லும்
        மார்க்கமுடன் வருவரென்றென்
மனம் மிகக் கலங்குவதால்
        மாதவ, மதுசூதனா – நின்
மால்வடிவம் மாற்றியருள் என்
        மனதுவக்கும் மகவாய் என்றாள்

*திருமால் தேவகி-வசுதேவரிடம் கூறியது*

"முன் கல்ப ஸ்வாயம்புவ
        மன்வந்தரத்தில் நீர்
முத்தெனவே ப்ருச்னி
        ஸுதபஸ் என்றிருந்தீர்
விகல்பமற்ற ஸுதபஸ்
        வேண்டும் வரமதனை
விருப்பமுடன் அளித்திடும்
        வேட்கையால் உம்முன் தோன்ற

சிற்றின்ப மறியாத
        செம்மதியால் நீர் என்
சித்தாகும் மாயையினால்
        சீவன் முக்தி வேண்டாமல்
எனக்கீடாய்த் தோன்றும்
        இனிய மகவு தனைக் கேட்டீர்
என்வரத்தைப் பெற்ற நீவிர்
        இருந்து சிற்றின்பம் காண்டீர்

எனக்கு இணையாக வேறு
        எவருமினறிப் போனதால்
என் வாக்குப்படி யானே
        இனிய ப்ருச்சனி கர்ப்பனாக

காசினியில் உம் மகவாய்க்
களிப்புடன் நான் பிறந்தேன்
கச்சியப்பர் அதிதியாய் நீர்
காசினியில் இருந்த போது,

உம் மகவாய் குறள் வடிவாய்
உலகளந்த வாமனனாய்
உபேந்திரன் எனும் பெயரில்
உமக்கு மகவாய்ப் பிறந்தேன்
மூன்றாம் இப் பிறவி நான்
முன் சொன்ன வாக்குதனை
முறையாகக் காத்திட – உமக்கு
உறவாக மகவாய்ப் பிறந்தேன்

எந்தன் எழில் வடிவை நும்
ஏற்றத்தால் கண்டீர் – நீர்
எடுத்த முன் ஜென்மத்தின்
இயல்பை உரைத்து என்னைப்
புத்திரனாய்ப் பரமனாய்ப்
புரிந்து சிந்தித்துப் பின்
புகழ் பரம பதமடைவீர்'' எனப்
புகன்றான் அச்சுதன்

''எனக்குத் துன்பம் கம்சனால்
என்று நீர் கருதினால் என்னை
எடுத்துச் சென்று கோகுலத்தில்
இட்டு விடுவீர் என்னுடைய
யோக மாயை கோகுலத்தில்
யசோதையின் மகளாகத்
தான் பிறப்பாள் அவளை
தங்கள் மகளாக்குக

சிறைக் கதவு தாள் திறந்து —உம்
சிக்கலைப் போக்கும் – நும்
சித்தம் குளிர யமுனை
சிறு பாதை அமைத்துவிடும்''
என்று சொல்லி மாதவன்
இனிய பெற்றோர் கண்டிட – புவி
எங்குமுள்ள மானிட
இளம் குழவி வடிவானான்

## வேத முதல்வனும் யோக மாயையும் இடம் மாறுதல்

மைந்தனாம் மாலின் உரையை
மனதினில் ஏற்று வசு
தேவரும் சிசுவை எடுக்கத்
திறந்தன சிறையின் தாள்கள்
பிரசவ அறையை விட்டவர்
புறப்பட்ட வேளையிலே
பிறப்பில்லா யோக மாயை
பிறந்தனள் யசோதை மகவாய்!

மாயையாம் யோகை வரவால்
மண்டலம் உறங்கிக் கிடக்க
துவார பாலகர்கள்
துவண்டு தம் சக்தி இழக்க
பகலவன் கண்டு மறையும்
பாழிருள் போலச் சிறையின்
தடையெல்லாம் நீங்கி விலங்கும்
தாள்களும் திறந்தனவே!

மென்மழை பொழிய குழந்தை
மேல்மழை படாவண்ணம்
அன்புடன் அணையாய்க் கிடக்கும்
ஆதிசேடன் குடையாய் விளங்க

பொங்கும் நுரை அலைகளுடனே
பெருஞ்சுழி கொண்ட யமுனை
பங்கய முகத்தான் செல்லப்
பாதை நன்கமைத்துத் தந்தாள்

நந்தகோபர் மனையடைந்த
நடுநிசிப் போதிலங்கு
மந்தமாய் மக்களெல்லாம்
மயங்கியே உறங்கக் கண்டு
வசுதேவர் தம் மகவை
வசதியாய் யசோதையிடம்
வளரவிட்டு அவள் மகவாம்
வண்ணக் கொடி தனைச் சுமந்து

யசோதை துயின்றிருக்க
யமுனை நீர் தான் விலக
யாரும் அறியா வண்ணம்
யதுகுலத்தோன் சிறையடைந்தார்
வண்ணக் கொடி மகளை
வசுதேவர் தன் மனைவி
தேவகி அருகிடவும் – தாள்
திறந்த சிறை பூட்டிக் கொள்ள

சிறுமணிக் குரலோசையைச்
சிறைக் காவலர் தாம் கேட்டு
கருநாகமெனக் கம்சன்
கலங்கிடவே உரைத்து விட்டார்
அச்சிசுவை வதைக்கத் தருணம்
அதுவே தக்கதெனக் கம்சன்
இச்சையுடன் எழுந்து கால்
இடரக் குழல் விரித்துச் சென்றான்

## தேவகி கம்சனிடம் கூறியதும் யோக மாயை கம்சனுக்கு அறிவுரைத்தலும்

கருணையில்லா மனமுடைய
கம்சனாம் தன் தமையனிடம்
அருமையான தேவகியும்
அகமுருகி வேண்டுகிறாள்
"மருமகள் இவள் உனக்கு
மங்களம் மிகுந்த இவள் என்
மகவாக இருப்பினும் பெண்
மகவே இதைக் கொல்லாதே

உமக்குத் தங்கை யென்று
உறவாகத் தான் பிறந்து என்
உதிரத்தில் உதித்த தெல்லாம்
உமக்களித்து உளம் உடைந்தேன்
அக்னிபோல் பொலிந்த என் மக்கள்
ஆறும் நீர் கொன்றீர் இந்த
அபலை மனம் தேறிடவே
அளிப்பீர் இம் மகவை எமக்கு"

என்று இறைஞ்சி அழும்
எளியவளாம் தேவகியின்
கன்றாம் இளம் கனிமகளைக்
கம்சன் கரம் பற்றிக் கொண்டான்
அச்சிறு மதலையின் இரு
அழகிய கால்பிடித்து
உச்சி கல்தரை படிய
ஓங்கி அடிக்கையிலே

## கம்சனுக்கு யோக மாயை அறிவுறுத்துதல்

எழிலாக ஆடை மாலை
இரத்தின மணி அணிகள் பூண்டு
ஒயிலாக விண் சேர்ந்து
உலகளந்தான் தங்கையாக
எட்டுக் கரங்களிலே
ஏந்தி நின்றாள் ஆயுதங்கள்
கத்தி, வில் சூலம் பாணம்
கதை கேடயம் சங்கு சக்கரம்

சித்தர் கந்தருவரோடு
சாரணர் கிங்கரரும்
தேவமாதர் நாகரெல்லாம்
தேவியைப் புடை சூழ்ந்து நின்று
காணிக்கை பல அளித்து
களிப்புடனே தாள் பணிந்தார்
கம்சனைப் பார்த்துத் தேவி
கனன்றெழுந்து தான் சொல்வாள்

"உன்னைக் கொல்வதற்காய்
உலகத்தில் பிறந்தவன்
உலகத்தில் எங்கோ தான்
ஓரிடத்தில் மறைந்திருக்க
என்னைக் கொல்லுவதால்
ஏதுபயன் உந்தனுக்கு ?
ஏழைகளை வதைக்காதே
இனியேனும் அறிவிலியே" என்றாள்

அரக்க மனம் கொண்ட கம்சன்
அறிய உரை நிகழ்த்திய பின்
இரக்கமுள்ள யோக மாயை
இகத்தில் பலதலங்களிலே

பகவதியாய்ப் பார்வதியாய்
பலநாமம் தான் கொண்டு
பக்தி மனம் கொண்டோர் தன்
பாதம் பணிந்திட கொலுவிருந்தாள்

கம்சன் தேவகி-வசுதேவர் விலங்கை
நீக்கி மன்னிப்புக் கேட்டல்

"அரக்க மனம் படைத்த
அந்தகனாம் என்னாலே
அருமை மக்கள் அறுவரையும்
அந்தோ பறி கொடுத்துவிட்ட
அருமைத் தங்கை தேவகி
அவள் கணவன் வசுதேவா
இரக்கமற்ற பாவியேன் நம்
இனிய உறவையும் மறந்து

செய்த பெரும் பாவத்தினால்
செத்த பிணம் போலுமானேன்
மெய்வருந்த நான் அடையும்
மிக்க கடும் உலகெதுவோ?
பொய்புகலத் தெய்வ மதும்
புவியில் மனம் கொண்டதுவோ?
புரியாத பாவியாகி உம்
புத்திரரனைத்தும் கொன்றேனே

ஐயோ என் பிழை பொறுத்து
அன்புடையீர் மன்னிப்பீரென"
அரக்க மனக் கம்சனும் உள்
அரண்டு தொழுது அழுதான்
மாயைத் திருமகளாம்
மங்கை சொல் தனை நினைந்து
தூய வசுதேவர்—தேவகியை
துன்மதியாளன் விடுவித்தான்

## கம்சன் தன் மந்திரிகளுடன் கலந்தாலோகித்தலும் அதன் விளைவுகளும்

கங்குல் கழிந்ததுமே
கம்சன் தன் அவையடைந்து
அங்குள்ள அமைச்சரிடம்
அன்னை மாயை கூற்றுரைத்தான்
ஆய்ந்தறியும் ஆற்றலின்றி
அமரருடன் சமர்புரியும்
அசுரத் தன்மையுமிகு
அமைச்சரெல்லாம் கோபமுடன்

"அந்தணர் பசு வேதம்
சத்தியம் மன அமைதி, தயை
ஐம்புலனடக்கம் சிரத்தை பொறுமை
அத்தோடு தவம் யாகங்களும்
அடங்கியது அரியின் அங்கம்
ஆகவே நாம் இது பற்றி
ஆலோசனை செய்து வதம்
அவசியம் செய்திடல் வேண்டும்

அரசே! உமக்கெமனாம் சிசு
அண்டமெங்கோ ஒளிந்திருந்தால்
அழிப்போம் அதனைப் பூண்டோடு
அனைத்து ஊர், நகர், சேரியிலும்
அரும்பியிருக்கும் சிசு வதம் ஒன்றே
அரியினைக் கொல்லும் உபாயம்" என உயிர்
ஆசை மிகுந்து கம்சனும் தன்
அறிவிழந்து அதை ஆமோதித்தான்

## கோகுலத்தில்

மகவைப் பெற்ற மாதரசி நந்தர்
மனையாள் யசோதை தானுறங்க
மகவு ஆணா பெண்ணா என்று
மங்கையறியாள் மாயை லீலையினாலே
நல்மனம் கொண்ட நந்தகோபர்
நல்வரமாய்ப் பெற்ற பிள்ளை கண்டு
பல்விதமாய் மகிழ்வெய்தி பின்னர்
பரிசுத்தமாகக் குளித்து அலங்கரித்து

முறைப்படி அந்தணர் தமைக் கொண்டு
முகுந்தனின் கிரக நிலை கணித்து
புண்ணியாகவசனம் தனை முடித்து
பூசித்தார் பிதிரோடு தேவர்களை,
நந்த கோகுலத்தில் கோப கோபியர்
நல்நெய் வெண்ணெய் தயிர் பால் நீர் எடுத்து
ஒருவர் மேல் ஒருவர் அதனை எறிந்து மகிழ்ந்து
உல்லாசமாக விளையாடிக் களித்தார்

அருமை மிகு ரோகிணி
வசுதேவர் மனைவி
அவர் மைந்தர் இனியபாலன்
அவன் தம்பி முகில் வண்ணனுடன்
பெருமைக்கு உரிய நந்த
கோபரின் இல்லத்தில் அவர்
பேணிக் காக்கத் தம்
பிள்ளைகளுடனே இருந்தாள்

## நந்தர் கப்பம் செலுத்த மதுராபுரி செல்லல்

கம்சனாம் மன்னனுக்குக்
கப்பம் செலுத்திடும்
காலமது வந்ததாலே
கண்ணியராம் நந்தரும்
கோகுலத்தின் பொறுப்புகளைக்
கோபர்களிடம் விட்டு
கோலாகலமாக விளங்கும்
மதுராபுரி தனை யடைந்தார்

## வசுதேவர்- நந்தர் சந்திப்பும் உரையாடலும்

உத்தம நற்குணமும் பிறருக்கு
உதவும் நல் மனமும் கொண்ட
உற்ற நல் சோதரனாய்
உத்தம நண்பர் நந்தர்
மெத்த புகழுடைய
மதுராபுரி வந்ததறிந்து
மேன்மையுடை(ய) வசுதேவர்
மேவிச் சென்று கண்டார் நந்தரை

நண்பரான போதும் தம்பி
தமையனைப் போலத்தானே
நயம்பட விளங்கும் உயர்
நந்தரும் வசுதேவருமே
ஊன் உயிரைத் தழுவி
ஒருமித்து உய்வதுவாய்
தான் இரு மார்பும் தோளும்
தழுவியே மனம் மகிழ்ந்தார்

நல்வரவு கூறி அவர்தம்
நாட்டின் நலமதனைக் கேட்டு
பல்வித உணர்வால் ஒன்றி
பரிவு மேலிட்டு அங்குள்ள

இல்லம் சுற்றம் சூழல்
எல்லாம் பற்றி பலப்பல
உள்ளம் திறந்து பேசி அவர்
உவகை தான் மிகவே கொண்டார்

### வசுதேவர் நந்தரிடம் உரைத்தல்

"அலைகடலை ஒத்த வாழ்க்கை
அவலச் சுழலினிலே
அய்யா நீர் புதுப்பிறவி
அடைந்ததை ஒத்தீர்,
அலைமகள் அருளால் அடையும்
அனைத்திலும் சிறந்த செல்வம்
அன்பு மதலை அதனை
அடைந்திடும் பேறு பெற்றீர்

நதியின் போக்கால் பிரிந்து செல்லும்
நற்கட்டைகள் போலத்தான் நாமும்
நந்தரே இந்நாள்வரை பிரிந்திருந்தோம்
நானிலத்தில் மிக அதிசயமென
அன்புடன் வசுதேவர் உருகி, மிக
அருமையானவரே எனக்கு நற்
கதிதான் இன்று உம்மை இங்கு
கண்டு கொண்ட பேறென்று மொழிந்தார்

உத்தமியாம் என்னுடைய
பத்தினியாம் ரோகிணியும்— உம்
உடன் வாழும் எந்தனுடை
மைந்தனாம் பாலகனும்
மெத்தவும் நலமா?" என அவர்
மேலுள்ள பாசத்தால் அன்பு
மேவிட வசுதேவர் பிரிய
நந்தரைப் பார்த்துக் கேட்டார்

## நந்தரின் பதிலும் வசுதேவர் நந்தரை எச்சரித்தனுப்புதலும்

"நண்பா உம் மகவாறும்
நச்சன்ன கம்சனால்
நசுக்கப்பட்டழிந்தனர்
நம்மகளும் விண் சேர்ந்தாள்
புண்ணிய பாவம் நாம்
புரிகின்ற செயற்படி என்று
எண்ணி அறிந்தோர்கள்
எதற்கும் மயங்குவதில்லை."

என்று நந்தர் சொன்ன
இதமான வார்த்தை கேட்டு—மனம்
வென்ற வசுதேவர் நிலை
நன்றாக அறிந்தமையால்
"இன்றே விரைந்து செல்வீர்
எழிற் கோகுலம் நோக்கி அங்கு
தென்றலைச் சுடும் நெருப்பாய் – ஆபத்துத்
தெரியுது குறியில்" என்றார்.

வாய்ம்மை நல் நோன்புடைய
வசுதேவர் வாக்கேற்று அலை
பாயும் மனமுடன் —நந்தர்
பயணத்தை மேற்கொண்டார்
பொய்க்காத வார்த்தை சொல்லும்
புகழுடை வசுதேவர் சொல்லால்
மெய்யோடு உளம் கலங்கி அரி
மெல்லடியினைச் சரணடைந்தார்

## குழந்தையைக் கொல்ல கம்சனின் திட்டமும் முயற்சியும்

மந்திரி மார் சொன்ன
தந்திரத்தை ஏற்று
மன்னன் கம்சன் தன்
மதிஇழந்து ஆணையிட
பூதனை என்னும்
பெயருடைய ஓர் அரக்கி
பூஞ்சிசுக்களைக் கொல்லப்
புறப்பட்டாள் துரிதமாக

வேண்டும் இடத்திற்கு
விண்வழியே சென்று
வேண்டும் வடிவினை
வியனுலகில் ஏற்று
ஆண்டுள்ள நகர், சேரி
கிராமங்கள் சென்று பூதனை
அத்தனை சிசுக்களையும்
கொன்று குவித்தாள்.

## பூதனை நந்தகோபர் இல்லம் அடைந்ததும் பின் நிகழ்ந்ததும்

விண்வழி தன்னுரு மாறிப் பூதனை
விதவிதமாய்ச் சிசுவதம் செய்தபின்
விதிவசமாய் ஓர்நாளில் நந்தரின்
விளங்கிப் பொலியும் வீடுதனையடைந்தாள்

தன் வலிமைதனைத் தான் உள்ளடக்கி
தக்கவிதமாய் மறம் தனை ஒடுக்க
கண்மணி கருமுகில் வண்ணன் கண்முடி
கள்ளத்துயில் கொண்டு காத்திருந்தான் அங்கே!

அன்னையர் இருவர்
அருகிருந்தும் – மாய
அரக்கியின் அழகிலவர்
மயங்கி நிற்க அவள்
அதர்மத்தை எரித்திடும்
அனலெனவே – புவியில்
அவதரித்த அச்
சிசுவினைக் கண்டு

பாலகன் பார்முதல்வன்
என்பதை யறியாப்
பாதகி பூதனையாள், அப்
பசுஞ் சிசுவை எடுத்துப் பொய்ப்
பாசமுடன் தன் முலைப்
பால் கொடுத்து பெரும்
பாவியாம் கம்சனின்
பணி செய்ய முனைந்தாள்

சிற்றிதழ் அவள் முலை
வாய்ப் பட்ட உடனே
சிறுகச் சிறுக
அவள் உயிரதையும்
சிரமமின்றி ஸ்ரீதரன்
சேர்த்து உறிஞ்சிடவே
சித்திர வதைப் பட்டு
பூதனை மடிந்தாள்

விழுந்தாள் பூமியில்
பூதனையும் தன்
விகாரமான பெரும்
அரக்க உடலோடு அவளை

விறகிட்டு எறியூட்டு
முன்னே கோபர்
விழுந்த மரமென உடலம்
வெட்டி வினை முடித்தார்

கள்ளமில் குழந்தை மால்
கனி இதழ் பட்ட அந்த
கருணையற்ற அரக்கியவள்
உடற்புகையும் கூட
தன்மணம் மாறி அகில்
நறுமணம் பெற்றது
தரணியில் அவளும்
நற்கதி யடைந்தனளே!

கொல்ல வந்து தன்
முலைப் பால் கொடுத்த
கொடிய அரக்கிக்கும்
தாய் நிலை யளித்து
எல்லை இல்லாத
கருணையுடனே
எழிற் திருமால் தன்
இணையடி சேர்த்தான்

கோபியர் தம்மோடு
யசோதை கோவினமும்
கோகுல பாலனுக்கு
பாலமுதம் அளித்து
கோபாலனின் அருள்
பேறு பெற்றதால்
கோபர்கள் அஞ்ஞானம்
அற்று மிளிர்ந்தனர்

## குப்புற விழுந்த மகனை யசோதை மங்கள நீராட்டுதல்

தான் பிறந்த நட்சத்திரம்
தான் நின்ற நாளில் தம்
தவச் செல்வன் குப்புறத்
தான் விழுவதைக் கண்ட
தந்தை, தாய் சுற்றம்
தமியராம் நட்பும் மகிழ்ந்து
தக்கவேதியரால்
தாம் மறையோதிடச் செய்து

கீதமோடு வாத்தியம்
முழங்கி ஒலிக்க
கிளர்ஒளி யசோதை
நங்கை நல்லாள்
வேதமுழு முதல்வனை
வாரி யணைத்து
வேகமாய் மங்கள
நீராட்டி முடித்தாள்

## சகடாசுர வதம்

வந்த விருந்தினர்
தம்மைப் பேணும்
வகையினில் தன் மனம்
லயித்த யசோதை
கந்தம் கமழும் குழல்
வண்ணன் மாயவன் தன்
மைந்தன் அழும் ஒலி
கேட்டாளில்லை.

வண்டியின் அடியில்
படுத்திருந்த நந்த பாலன் – தன்னை
வாரியணைத்துத் தன்
பசியாற்றாததனால் பிறர்
கண்டிடாத போது தன் பிஞ்சுக்
காலால் வண்டி தனை உதைக்க
வண்டி குடை சாய பாலனை
வதைக்க வந்த சகடாசுரன் மாண்டான்

விந்தையாய் நிகழ்ந்த
வித்தை தன்னை
விருந்தினர் உற்றார்
உறவெல்லாம் கண்டு
விரைந்து சென்று மகவை
வேகமாய் எடுத்தணைத்து வண்டி
விழுந்ததின் மாயத்தை
விளங்காமல் பேசி நின்றார்

பாலகர் கூற்று

"பிள்ளை தன் காலாலே
வண்டி உதைத்ததை
பிசகாமல் கண்டோம்"
என்றனர் சிறுவர். பெரியோர் "(நம்)
கண்மணி கார்எழில் கற்கண்டு
சிறுமதலை அச்சிறு
கால்களுக் கேது
பலமென்று" நினைத்து

குழந்தைக்குக் கிரகபீடை நீங்க மந்தரித்தல்

அறியாச் சிறுவர் பேச்சு
அர்த்த மற்றது என
அச்சுதன் பலமறியா
ஆயர்கள் பேசிப் பின்

அழும் பிள்ளையின் கிரக
பீடை நீங்கிட
அந்தணர் தமை யழைத்து
ஆவன செய்தனர்

நால் வேதம் கற்றறிந்த
நல்ல அந்தணர்கள்
நற்குணமும் நல்மனமும்
தானுமுடையவர்கள்
நல்ல மூலிகை சேர்த்து
நீரை மந்திரித்து
நந்தர் மகனை, நந்தா விளக்கை
நல்ல விதமாய் நன்னீராட்டிட

நந்தர் மனம் நிறைவு பெற்று
அமைதியும் பெற்றதனால்
நற்றவ அந்தணர் மனம்
நிறையும் வகையாய்
நல்விருந்தளித்து அவர்
வாழ்திட ஏற்று அதை
நல்வரமெனக் கருதி
மனம் மிக மகிழ்ந்தார்

கம்சன் திருணாவர்த்தனனை ஏவுதல்

பின்னொரு நாள் யசோதை
தோட்டத்தில் நகையரும்ப வந்த
பிள்ளைக் கனியமுதை
மடிசேர்த்துச் சீராட்ட
சொல்ல முடியாக் கனம்
தாளாமல் மடிமீதிருந்த
பிள்ளையை தரையில் விட்டு
பெருமாட்டி உள் சென்றிட

திக்கெல்லாம் சுழன்றடிக்கும்
காற்றின் வடிவிலே
திருணாவர்த்தன அசுரன்— கம்சன்
ஆணைப்படி வந்து
சொக்கும் எழிற் குறும்பனைத்
தூக்கி எடுத்துமே – எட்டுத்
திக்கொலிக்க கொடிய
ஒலி எழுப்பி உயரே சென்றான்

## திருணாவர்த்தனன் வதம்

பிள்ளை மகன் தெய்வப்
பேரழகனைச் சுமக்க – அசுரன்
பிரம்ம பிரயத்தனம் செய்தும்
பலனேதுமின்றி சிசுவை
தள்ளிவிடத்தான் முயன்ற
தன் முயற்சியிலும் தோற்று
தான் பூமி தனில் விழுந்து
திருணாவர்த்தனன் இறந்தான்

சுழற் காற்று கொண்டு சென்ற
குழந்தை பூமியில்
சுகமாய் வந்து சேர்ந்ததைக்
கண்டு வியந்து
பழம் போன்ற மனமுடனே
பரிவும் மிகவுடைய
பாவையரும் கோபர்களும்
பரவச மடைந்தனரே

ஞானியராம் வசுதேவர்
நாவுதிர்த்த சொற்படியே
நாள்தோறும் நிகழுவதை
நந்தருமே கண்டதனால்

ஆனந்தமும் வியப்பும்
அவர் ஒருங்கே தானடைந்து
அற்புதமென வசுதேவரை
அன்புடன் மனதில் கொண்டாடினார்

### வசுதேவர் கர்க்க முனிவரைக் கோகுலம் அனுப்புதல்

வசுதேவர் குல ஆசாரியார்
கர்க்கரைத் தம் குலம்
வளரவந்த வித்துக்களுக்கு
வகையாய்ச் செய்ய வேண்டிய
நாமமிடுதல் முதலான
நற்காரிய மாற்ற வேண்டி
நந்த கோகுல மனுப்ப– கர்க்கரும்
நந்தரைக் கண்டார் சென்று

நந்தர் யாதவ குலத்தின்
புரோகிதராய் விளங்கும்
நற்றவ பிரம்ம முனியாம்
கர்க்கரைப் பணிந்து
வந்தனைகள் சொல்லி
வரவேற்று உபசரித்து அவர்
வரவால் உய்ந்தனம் என
வணக்கமுடன் கூற, கர்க்கர்

### கர்க்கர் நந்தரிடம் கூறியது

“ஆசாரியன் யது குலத்திற்கு
யான் என்பது மட்டுமன்றி
அழகிய தேவகியின்
மாயை மகள் சொல்லாலே
அச்சமுற்று அவள் எட்டாவது
கர்ப்பமதனைத் தானழிக்க
ஆவலுள்ள கம்சன் இதனால்
ஐயம் மிகக் கொள்வான்

அத்தோடு நந்தரே
வசுதேவரும் நீரும்
அன்பான நண்பர்களாய்
அவனியில் இருப்பதால்
முத்தாய் நீர் பெற்ற மகவை
தேவகியின் மகவெனவே
மூர்க்கனான கம்சன் வதம்
செய்திடவும் கூடுமென்றார்"

கர்க்க முனிவர் ரகசியமாகக்
குழந்தைகளுக்குப் பெயரிடுதல்

"என்னுடன் ஒன்றாக
இருப்பவரும் அறியாமல் என்
கண்களே போல் கருமணிகளுக்குக்
கர்க்க மாமுனிவரே தாங்களே
பண்ண வேண்டும் சடங்கென"
பணிவுடன் நந்தர் வேண்ட – அவர்
சொன்னபடியே கர்க்கர் பிறர்
அறியாமல் நாமமிட்டார்.

"உரோகிணி புத்திரனாம் இவன்
இனிய இராமனாவான்—தன்
உத்தம நற்குணத்தால் அனைவரும்
இன்புறச் செய்திடுவான்
பராக்கிரமசாலி இவன் எனவே
பலபத்திரன் என்றழைக்கப்படுவான்
பார்வியக்க ஒற்றுமையைப்
பரப்பி சங்கர்ஷணனாவான்.

உயர்வற உயர்நலம்
உடைய உன் மகன் தன்
உன்னத நற் குணத்தால்
செயலால் பலப்பல

பெயருடனே பெரும் புகழ்
செல்வம் கீர்த்தியால்
அயர்ச்சியின்றி உம்
அல்லல் எல்லாம் களைவான்

முன்பிருந்தான் இவன்
வசுதேவனின் மைந்தனாய்
முகுந்தன் இவனே
வாசுதேவன் எனப்படுவான்
அன்புடை இவ்வழகன் –பல
வடிவோடு நாமங்கள்
அனைத்து மறிவேன் ஆயின்
அறியார் பிற மானிடர்

ஆதிஹரி அச்சுதனுக்கு
இணை இவன் இந்த
சோதியை நீர்
கவனமாகப் பேணிடுவீர்'' என
ஓதி நந்தர் உவக்கப்
பெயரிட்டுப் பின்
வீதி இறங்கித் தம்
வீடு சென்றடைந்தார் கர்க்கர்

கர்க்கரின் வார்த்தையினைக்
கவனமாகக் கேட்ட நந்தர்
சுவர்க்கமே தனக்குச்
சொந்தமாய் ஆனது போல் –நிலை
நிற்கும் மங்களங்கள்
நிறைந்தவராகத் தம்மை
நினைத்து மகிழ்வெய்தி
நிறைந்த மனமுடனிருந்தார்

வையத் தனி முதல்வன்
வசுதேவர் தன் மைந்தன்
வனப்பு மிகு கோகுலத்தில்
வளர்கின்ற வாசுதேவனை
செய்ய நல்லன்பில் சிறந்த
கோபர்கள் அருமையாக
மெய்தீண்டி மகிழ்ந்தழைத்தார்
மேக வண்ணக் கண்ணன் என்றே!

## கண்ணனின் பால லீலைகள்

சின்னாட்கள் சென்ற பின்
சிசுக்களாம் பலராமன் கண்ணன்
முன்னால் இருகையிட்டு
முழங்காலால் தவழலானார்
பின்னாளில் சேறளைந்து
பெருமிதமாய் வருமக்கள்
தன்கையைத் தாம் பிடித்து
தழுவி அன்னையர் அன்பால்

பொங்கும் தம் முலைப்பால்
அமுதளித்துப் பிள்ளைகளின்
பொலியும் மதிமுகப்
புன்னகையில் தாம் மயங்கி
கங்குல் தனை விரட்டும்
கதிர் முகத்தின் கனிவாயில்
பங்கமின்றி முளைக்கும்
பற்கண்டு தாம் மகிழ்ந்தார்

அண்ணன் பலராமனுடன்
அருமை நற் தோழருடன் — கார்
வண்ணன் கருங்குழலான்
கண்ணன் களங்கமில்லா

வண்ணம் கலந்தொன்றாய்
விளையாடக் கண்டதனால்
இன்னும் மகிழ்ச்சி பொங்க
இருந்தனர் ஆய்ச்சியரே

## கண்ணனைப் பற்றி கோபியர் யசோதையிடம் முறையிடுதல்

“தாயே யசோதா உன்
தனயன் செயல்தனைக் கேட்பாய்
மாயம் இவனறிவான்—எம்
மனை வெண்ணெ தயிருண்டான்
போயே செயல் புரிந்திடாது பொழுது
போக்கும் வேளையிலும்
நீயே கேட்பாய் ஆங்கு
நின்ற கன்றை அவிழ்த்து விட்டான்

பொல்லாத் திருடன் ஒளி
புகமுடியா இருளினிலும்
நில்லாமல் ஒளிரும் தன்
நீலமேனி அணி மணியை
வல்லான் தீபமாகக் கொண்டு
வந்து உறி உடைத்துச் சென்றான் —உன்
செல்வன் செயல் இன்னும் கேள் – உறி
சிந்தும் பால் தயிருண்டான்

உண்ணப் பொருள் இல்லையெனில்
உடைத்துச் சொல்வான் சட்டி பானை
கண்ணைப் போன்ற எம் மகவைக் கிள்ளி
கதற வைத்துக் கடுகிச் செல்வான்
உயரே உள்ள வெண்ணைக்காய்
உரலை உருட்டிச் சென்றெடுப்பான்
உதவும் தோழருடன் வெண்ணை
உண்டு குரங்குக்கும் அளிப்பான்”

என்றே கோபியர்கள் பலர்
ஒன்றாய் வந்து சொல்ல, இளம்
கன்றாய் முகம் மாற்றித் தன்
கனியிதழின் நகை மறைத்து –அருட்
குன்றாயான முதல்வன் – சிறு
குறும்பன் என நின்றான் –மனம்
வென்ற இளம் பாலன்
விளையாட்டாய் வேல் விழியார் முன்னே !

### கண்ணன் மண் உண்டு மண்டலத்தைக் காட்டியது

கண்ணன் அண்ணன் பலராமனுடன்
களிக்கும் தோழர்களும் – கண்ணன்
மண்ணை யள்ளி உண்டதாக
மாயக் கண்ணன் அன்னையிடம்
உண்மை சொல்லி விட்டதனால்
உடன் தன் மகனுடை நலம் விரும்பி
கண்கள் மருளப் பயந்து நிற்கும்
கண்ணனை அதட்டி அன்னை யசோதை

"உன் தமையனோடு தோழர்களும் –நீ
உண்டாய் மண்ணை என்றனரே
உண்மையை உடனே உரை"யென்று மிக
உக்கிரமாகத் தான் கேட்டாள்
கண்ணன் மிகவும் பயந்தது போல
கண்மலர் ஒவியம் தான் கெஞ்ச
"மண்ணை நான் உண்ணவில்லை உன்
மகவென் வாய் நீ பார்" என்றான்

### கண்ணனின் வாயினுள் யசோதை கண்டது

"என்றால் நீ உன் வாயைத் திற
எதுதான் மெய்யெனக் காண்கின்றேன்"
என்ற அன்னை சொற் கேட்டு
இனியன் இளவாய் தனைத் திறந்தான்

ஆதியும் அந்தமும் எல்லாமுமாய்
அண்டங்கள் உயிர் வகை ஜடமனைத்துமே
அக்னி, வாயு, மதி, விண்மீன்கள்
அசையா மலை திசை கடலோடு தீவும்

தன் சிறு மதலை தளிர் வாயில்
தக்க சுபாவம் செயல் காலத்தினால்
மன்னுலகாய் மாறி விசித்திரமாய்
மங்கை தன்னுடன் கோகுலம் கண்டாள்!

கண்ணன் சிறு வாயில்
கண்ட காட்சிகள்
கனவா ? நனவா ?
மாயையா? அன்றி என்
கண்ணனின் ஆத்ம
சக்தியோ? இவையென
எண்ணித் திகைக்கையில்
அரி தன் அன்னைக்கு

தன்னை அவள் மகவாய்க்
காணும் தாய்ப் பாசம்
என்னும் மாயை
தனை உண்டாக்க, தான்
முன் கண்ட காட்சியை
முற்றும் மறந்தவளாய்
தன் மகன் இவன் என்னும்
தாய்ப் பாசத்தில் திளைத்தாள்

பணியாளர் அருகிலில்லா
நாள் ஒன்றதில்
பாவை யசோதை தயிர்
கடைந்திருக்கையில்

அழகன் நம் குறும்பன் தயிர்
மத்தினைப் பிடித்து, அவள்
தயிர் கடையா வண்ணம்
தடுத்துச் சிரித்தான்

அமுதப் பால் பருக வந்த
மகனைத் தான் அள்ளி
அன்புடனே மடி யிருத்தி
பாலமுதூட்டினாள்
அவ்வயம் அடுப்பிலிருந்த– பால்
பொங்கி வழிந்திட
அதை இறக்க மகனை
மடி இறக்கிச்சென்றனள்

கண்ணன் குறும்பு

தன் விருப்பம் முற்றும்
கை கூடுமுன்னே
தாய் மடி இறக்கி விட்டுச்
சென்றதாலே
கண்ணன் செவ்விதழ் துடிக்கப்
பல்லால் கடித்து அம்மிக்
கல்லால் சட்டி உடைத்துக் கண்ணீர்
பொங்க மறைவின்

உள்ளே சென்று வெண்ணை அள்ளி
உண்டிருந்தான் –இது
ஒன்றுமறியாது யசோதை
திரும்பி வந்தனள்
கள்ளக் கண்ணன் உடைத்தான்
தயிர் பானையை என்று அவனைக்
காணாததால் காரிகை உள்
உணர்ந்து நகைத்தாள்

## யசோதை கண்ணனின் குறும்பு கண்டு அவனை உரலில் கட்டி வைக்க நினைத்தல்

உரலின் மேலமர்ந்து
உறிவெண்ணை எடுத்துத் தான்
உண்பதோடு விருப்பம் போல்
குரங்குகளுக்கும் அளிக்கும்
உலகளந்த மாயனிவன்
என்றறியாமல் கண்ணனை
ஓடி வந்து யசோதை
உள் அன்பு மறைத்து

பார்க்கையில் தன் விழியில்
பயத்தினைத் தேக்கி கண்ணன்
பனிமலர் போல் மையெழுதிய
கண்களைக் கசக்கி அழ –தன்னைப்
பார்த்து அழும் பாலகன் கை
பற்றிய யசோதை தன்
பாவை உள் மனம் பதைக்க –கோல்
ஓங்கி அதட்டினாள்

குழந்தை கோபாலன் தன்
கோபம் கண்டு பயந்ததாகக்
குறியுணர்ந்து கொண்ட பேதை
கோலினை எறிந்து விட்டுத் –தன்
இளமகன் பெருமை உணரா
இயல்பினால் யசோதை உயிரின்
இனியவனை உரலில் கட்ட
எண்ணம் கொண்டாள் என்னே!

## யசோதை கயிறு எடுத்து வருதல்

உள், வெளி,முன், பின்
உலகமென்ற பேதமின்றி —எல்லா
உலகமாகத்தான் விளங்கும்
ஒருவனைத் தன் மகவு என்று
கள்ளமின்றிக் கருதிக் கொண்டு
கனிவுடைய யசோதை அருமைக்
கண்ணனை உரலில் கட்ட
கயிற்றினை எடுத்து வந்தாள்

## யசோதை கண்ணனைக் கட்ட முடியாமல் களைக்க கண்ணன் அன்னைக்குக் கட்டுப்படுதல்

எடுத்த கயிறெல்லாம்
எத்தனை சேர்த்தாலும்
இரண்டு விரற்கட்டைக்
குறைவதால் திகைத்து
தொடுத்த பூச்சரம் தொங்க
குழல் அவிழ
தோகை உடல் வியர்த்து
நிற்கும் தாய் கண்டு

மாயக் கண்ணன் தன்
மனமது இரங்கி தன்
மாதா யசோதா
மனவிரும்பியபடித் தன்னை
உரலில் பிணைத்திட
உள்ளம் ஒப்பி
உகந்து ஓர் மாயம்
உத்தமன் செய்ததால்

சேயை உரலில் கட்டிய யசோதையின்
செய்தவமருளிய இப்பெறும் பேற்றை
அரிதன் மார்புறை திருமகள் தன்னோடு
அரன், அயன், தேவரும் பெற்றாரில்லை!

ஊனுடம் பெடுத்த
உத்தம ஞானியர் தம்
உள்ளொடுக்கி உணரினும்
காணுதற் கரியவன்
தானுடம் பெடுத்து
தந்தை தாயோடு
தானிருந்தான்
எளியனாய்க் கோகுலத்தில்

உள் மனம் கனக்க மகனை
உரலிலே கட்டி வெளியில்
உட்கார வைத்தபின்
உள்ளே யசோதை செல்ல
கள்ளக் கண்ணனோ
குபேரனின் மைந்தரைக்
கண்டானிரு மருத
மரத்தின் உருவில் அங்கே!

*கண்ணனின் சிந்தையையும் செயலும்*

நாரத மாமுனி சாபத்தால் பெற்ற
நாசமிது அவர்தம் வாக்குப் பலித்திட
நான் உரலை இழுத்துச் செல்லுவேன் இனி
நடக்கட்டும் நன்மை என்றே கண்ணன்

பொருள் மிகுந்த குபேர புத்திரர் அன்று
புரிந்த அப் பாவத்தின் சுமை கழியத் தன்
அருள் மனதால் அயன் மகனுடைய நா
அன்று சொன்ன சொற்படி நடந்தான்.

## குபேர புத்திரர் சாப விமோசனம் பெற்றது

இடுப்பில் கட்டிய கயிற்றால் உரலை
இழுத்துக் கொண்டு இன்னிளம் கண்ணன்
இரண்டு மருத மரங்களின் நடுவில்
இருந்த இடைவெளி வழியே சென்றான்

இரண்டு மரங்கள் நடுவில் உரலது
இருந்து மாட்டிக் கொள்ள மிகுந்த
இரைச்சலுடனே கிளைகள் குலுங்க
இரண்டு மரங்களும் வீழ்ந்தன வேருடன்

விழுந்த அம்மரத்தினின்று
விடுபட்ட இரு மானிடர்
விண்ணவர் போன்ற
ஒளியுருத் தாங்கி
விளங்கித் திசையெல்லாம்
பொலிய நின்றார்
விளையாட்டுக் கிருஷ்ணனால் –தம்
வினை நீங்கப் பெற்றவராய்

## குபேர மைந்தர் பகவானைத் துதித்தல்

பழுதெல்லாம் நீங்கிப் பரிசுத்தராய் நின்று
பரந்தாமன் பதமலரைப் பணிந்தவர் மொழிந்தார்
"தொழுதோம் தூயவனே உள் மனம் ஒளிர்ந்திட
உண்மையை உணர்த்தினாய் மாயனே எமக்கு

நாரத மாமுனி நல்லாசியாலின்று
நந்தர் மகனாய்ப் பரந்தாமனைக் கண்டோம்
பூரண கல்யாண குண மூர்த்தியே நீர்
புண்ணிய மங்கள வடிவுடையவரே.

யதுகுலத்திற்கு அதிபதி நீரே
யசோதை மகனாய் கோகுலமிருப்பவரே
மதுசூதனரே வசுதேவர் குமாரா
மாமலை எனப் புகழ் நிறை சாந்தவடிவே !

அருள் மலையே ஒளி
        தனி நிலையே –உம்
அடியாருக் கடியாராய்க்
        கொள்வீரெம்மை” –என
அஞ்சலித்தார் நள
        கூபனும் மணிக்ரீவனும்
அன்று நாரதரை
        அவமதித்து மரமானவர் !

பகவான் கூறியது

“அகந்தையால் நாரதர்
சாபம் பெற்றீர் அதுவே (உமக்கு )
அமுதமாயாகும் பின்னாளில்
என்றறிவேன் ஹரி 'நான்' உம்

அகந்தை அற்று என்றும்
அரி சரண் என்றடைந்தால்
அஞ்ஞானம் அற்றதாக
ஆகிவிடும் மனம் என்றார்

என்னிடம் அன்பு கொண்டீர்
        இதய நல் சுத்தியுடன்
என்னையே எண்ணித் தூய
        இனிய பண்பினராய் ஒழுகி
பண்பினால் நீர் சிறந்து
        பாழ்பிறவி தனைக் கடக்க , மால்
என்னையே சரண புருந்து –உம்
        இருப்பிடம் செல்வீர்” என்று

## குபேர புத்திரர் குபேர புரி செல்லல்

உரலில் கட்டுண்டு கிடந்த
உலகளந்த பெருமாயன்
உரைத்த நல் மொழிகளேற்று
உய்ந்த நள கூபர்களும்
உத்தமனை முழு முதலை
உரலோடு வலம் பல வந்து
உருகிப் பணிந்தெழுந்து
உம்பலருலகம் சென்றடைந்தார்.

## மருதமரம் விழுந்ததால் கோபர்கள் திகைப்பும் சிறுவர்கள் கூற்றும்

வேருடனிரு மருத மரம்
வீழ்ந்ததால் பூமியிலே
வேகமாய் இடியோ என
வெளிவந்து கோபர் கூடிக் காண
யார் செயல் இதுவென
வியந்துமே திகைத்துமே நிற்க
அங்குள்ள சிறுவர்களோ
"கிருஷ்ணன் லீலை அவனே – தன்னை

கட்டிய கயிற்றுடன்
இருமரம் நடுவிற் சென்று
கயிற்றுடன் இழுக்க
கயிற்றுடன் இணைந்த உரல்
நட்டமாய் மரமிரண்டின்
நடுவிலே சிக்கியதால்
நெட்ட நெடு மரமதுவும்
நிலத்திலே வீழ்ந்தது

மரமது வீழ இரு
மானிடர் வெளிப்பட்டார்
மாண்புடையீர் இது மெய்
யாம் கண்ட உண்மை”யென
கரவிலாச் சிறுவர் ஏதோ தாம்
கண்டதாகச் சொல்கிறார் என
மரமிருந்து மனிதர் வந்த
மாயத்தை அவர் நம்பவில்லை!

## நந்தர் கண்ணனை அவிழ்த்து விடுதல்

கட்டுண்ட கண்ணனை
கரியமால் அழகனைக்
கண்டார் நந்தர் தம்
கனி மகன் அமுதினைக்
கட்டிய கயிற்றினைக்
களைந்துமே கண்ணனின்
களிநகை பொங்கும்முகம்
கண்டுமே நகைத்தார்

## கண்ணன் கோபியர்களுடன் பழகி இருந்த விதம்

கோபியர் கைகளிலே
குழந்தை போலவும்
கோல மயில் குயில்களுடன்
ஆடிப் பாடியே
சோபிதமாய் கண்ணன்
சுகித்திருந்தான்
சுரலயக் குழலிசைத்து
மகிழ்ந்திருந்தான்

ஏவலனைப் போல படி
பாதக்குறடு பலகை
எல்லாம் எடுத்து கொண்டு
வந்து தருவான்
எல்லோரும் மெச்சும்படி
அன்பை வளர்த்து
எல்லாமாய் ஆனபிரான்
இசைந்திருந்தான்

தத்துவம் அறிந்தவர்கள் தாமும் காண அன்பின்
தத்துவத்தால் அடியார்க்கும் அடியனாயிருந்து
மெத்த மகிழ்வதனை கோகுலத்தில் பெருக்கி
குத்தமில்லான் குலவி விளையாடியிருந்தான்

*பரந்தாமன் பழக்காரியின் அன்புப் பரிமாற்றம்*

கர்மாக்கள் கழிய முக்திக்
கனிதனை யளிக்கும்
கண்ணன் ஓர் நாள் கூடைக்
காரி ஒருத்தியின்
கனிவாங்கி உண்ண விருப்பம்
கருத்திலே கொண்டு
கை நிறைய தானியத்தை
அள்ளி விரைந்தான்.

கைவழியே தானியங்கள்
சிதறிய நிலையில்
கனிவான கூடைக்காரி
கண்ணனை அழைத்து அவன்
கை நிறைய கனி வகையை
அள்ளி நிரப்ப அவள்
கனி கொணர்ந்த கூடை மணி
நிரம்பி வழிந்தது !

## யசோதை பாசமுடன் பலராம கிருஷ்ணர்களை அலங்கரித்து அமுதூட்டல்

அண்ணனோடும் ஆயர்குலத்
 தோழரோடும் சேர்ந்து
அழகுக் கண்ணன் அலுப்பின்றி
 விளையாடக் கண்டுமே
கண்ணன் பால் கொண்ட பிள்ளைப்
 பாச மிகுதியால்
அன்னை யசோதை அவனைக் கூவித்
 தேடியே வந்தாள்

"உந்தை உண்பதற்கு
 உமக்காகக் காத்திருக்க
உண்ணவாரீர் உணவு –எம்
 உள்ளம் மகிழ்ந்திடவே
சிந்தைக் கினிய சீர்
 கண்ணா பலராமா
சீக்கிரம் உம் தோழரும்
 உண்டு வரட்டுமென்றாள்

நந்தன் மகனே எம் நந்தா விளக்கே
உந்தன் நண்பர்கள் ஒழுங்காகத் தான் குளித்து
விந்தை யலங்காரம் விதவிதமாய்ப் புனைந்து
வந்துள்ள நேர்த்தி காண் வா நீயும் அவர் போல

தூய நீராடி உன்
 துலங்கும் மேனி அழகொளிர
நேயமுடன் நிகரின்றி
 அலங்கரித்து உன்குடல்
காய விடாத வண்ணம்
 கச்சிதமாய் உணவருந்தி எம்
ஆயர்குல விளக்கே நீ
 அதன் பின் விளையாடு" என்று

தன்பிள்ளை எனக் கருதும்
தரணி எல்லாம் வணங்குகின்ற
தாமோதரனைத் தன்
தாய்ம்மையினால் விளித்து
அன்பினால் கண்ணன் அவன்
அண்ணன் பலராமனையும்
அழைத்துச் சென்று நீராட்டி
அலங்கரித்து அன்னமிட்டாள்

## கோபர்கள் கோகுலம் விட்டு பிருந்தாவனம் குடி பெயருதல்

இந்த வனம் நம் தனம் தான்
இருந்தாலும் நம் கண்ணனுக்கு
இடையூறு பல கண்டோம் – நாம்
இனியுமிங்கிருந்தால் –மனம்
நொந்திடவே ஆபத்துக்கள்
நூதனமாய் வருவதனால்
சிந்தித்துச் சேர்ந்தொன்றாய்ச்
சீக்கிரமே குடி பெயருவோம்

புதுக் காடுகளை யுடைய
புல்பூண்டு மிகுதியான
புண்ணிய மலைகளுடைய
பிருந்தாவனமொன்றுண்டு
அது நமக்கு உகந்தது
அன்புடனே நீர் இசைந்தால்
அங்கு செல்லலாம் என்று
நந்த கோபர் கூறினார்

---

# பிருந்தாவன லீலை

"உத்தமம் அப்படியே"
என்று பல குரல்கள்
உற்சாகமாய் ஒலிக்க
ஒற்றுமை மிகுந்த ஆயர்
உடனே தம் மனை சென்று தம்
உடைமை எல்லாம் வண்டி ஏற்றி
உவப்புடன் ஆவினம் ஓட்டி
ஊக்கமுடன் பிருந்தாவனம் வந்தார்

அழகிய பிருந்தா வனம் தன்னை
அடைந்து மகிழ்ந்து ஆயர்கள்
அங்கு தத்தம் வண்டிகளை
அர்த்த சந்திர வடிவிலிட்டு

அவ்விடம் தாம் வசிப்பதற்கு
அவசியமாகத் தாம் வேண்டும்
அனைத்து ஏற்பாடும் செய்து
ஆவினம் காத்து வாழலானார்

## பலராமனும் கண்ணனும் கன்று மேய்த்தல்

பிருந்தா வனம் தன்னைப்
பிரியமுடன் தானடைந்து
இருந்தார்கள் கோபர்கள்
இளம் சிறார் நிலையடைந்த
அண்ணன் பலராமன்
ஆயர்குலத் தோழரோடும்
கண்ணனும் தான் சேர்ந்து
கன்று மேய்க்கும் கலை தேர்ந்து

விளையாட்டுப் பொருள் பல
வேண்டு மட்டும் கொண்டதனால்
அலையாமல் வெகு தூரம்
ஆய்ப்பாடி அருகினிலே
யமுனை மணற் திட்டுக்களில்
யாதவருடன் களித்திருந்தான்
கோவர்த்தன மலை எழிலைக்
கோபாலன் ரசித்திருந்தான்

## கன்றுருவில் வந்த அசுரன் கதி

கன்றுகளை மேய்த்து வரும்
கண்ணனோடு அண்ணனைக்
கொன்றுவிட அசுரனொருவன்
கன்றுருவம் தாங்கி அங்கு
நின்ற ஆவினங்களுடன்
சென்று தானும் கலந்து நிற்க அதை
நன்றாய் இனம் கண்டு கொண்ட நம்
நாயகன் அண்ணனுக்குக் காட்டி

ஒன்றும் அறியாதவன் போல்பின்
ஓடி அசுரக் கன்றடைந்து
பின்னிருகால், வால் தன்னைப்
பிடித்துச்சுழற்றி உயிரைப் போக்கி
ஆண்டிருந்த விளாமரத்தில்
அசுரன் உடல்தனை எறிந்தான்
மாண்ட உடல் பருத்த அசுரன்– கனி
மரக்கிளைகளோடு வீழ்ந்தான்

கன்றோடு கன்றாகக்
கலந்திருந்து கண்ணனுடன்
கனிவான பலராமனாம்
அண்ணனின் உயிரையும்

கவர்ந்துத விடத் தான் வந்த
காய் மன அரக்கனைக்
கண்ணன் இனம் கண்டு கொண்டு
கணப் பொழுதில் வீழ்த்தியதை

கன்று மேய்க்கச் சென்ற சிறார்
கண்டார் பெரு விந்தை யென
ஒன்று மறியா ஆவின் உருவில்
உடனிருந்த அரக்கன் மாள
இன்றோர் அதிசயம் இங்கு
இளம் கண்ணன் புரிந்தான் "மிக
நன்று" என்றவன் செயலை
நண்பர் மெச்சி மகிழ்ந்தனரே !

பகாசுரவதம்

பின்னொரு நாள் நீர் நிலையில் —ஆயர்
பிள்ளைகளெல்லாம் கூடித் தம்
கன்றுகளுக்கு நீர் காட்டித் தாமும்
களித்து நீர் அருந்துகையில்
வச்சிராயுதத்தால் சிதைவுற்ற
வானுயர் மலையின் சிகரமொன்று
உச்சி விட்டுப் பெயர்ந்து மலை
உருண்டு மடுவில் வீழ்ந்தது போல்

கூரிய மூக்கு தனை யுடைய
கொக்கின் வடிவம் கொண்டவனாய்
நீரின் நடுவே அமர்ந்திருந்த
நீள் பூதம் கண்டு பயந்து விட்டார்
ஆயர் சிறுவரைக் கண்டதுமே
அதர்மன் கம்சனின் நண்பன் பகன்
அழகன் கண்ணனை விழுங்கிடவே
அவசரமாக எழுந்து வந்தான்

பாய்ந்து வந்த பகாசுரனை
பாலகிருஷ்ணன் தோழர் காண
மூர்க்கனின் மூக்கின் இருபுறத்தை
முகில் வண்ணன் தன்னிரு கையால் பற்றி
விண்ணவர் மகிழ்ந்து மலர் பொழிய
மண்ணுளோர் கண்டு களித்திடவே –கண்ணன்
விராணப் புல்லைக் கிழிப்பது போல் –பகனை
விளையாட்டாகக் கிழித்துக் கொன்றான்

## பலராமன் கண்ணன் கௌமாரப் பருவ விளையாட்டுக்கள்

பால இளம் இன் பருவத்திலே
பறவைகளுடன் விளையாடுவது
கோல எழில் நதிக் கரையினிலே
கூடிக் கரை கட்டி ஆடுவது

கீழே விழாமல் கிளைதாவும் மந்தியாய்
கிருஷ்ணன் பலராமன் விளையாடி
சீலமுடன் கௌமாரம் எனப்படும்
சீரிளம் ஐந்தாண்டு கடந்தார்

## கண்ணன் ஆய்ச் சிறுவர்களுடன் வன போசனம் செய்தல்

கண்ணன் ஓர் நாள் காலையிலே
கன்று மேய்க்கும் தம் தோழரிடம்
அன்னத்தை அன்று வனத்தில் உண்ணும்
அவனுடை எண்ணத்தைத் தான் சொல்ல

கண்ணனின் வயதொத்த தோழர் குழாம்
களிப்பாய்த் தம் இசைவைத் தாம் சொல்லி
அன்று தாம் வனத்தில் உண்பதற்கு
அவரவர் இல்லம் தன்னிலிருந்து

வகைவகை அன்னம் நிறைந்த உறி
வாத்தியம், குழல், கொம்பு, பிரம்பும் கொண்டு
நகைபொழியும் இளம் முகம் மலர
நயந்து தம் ஆவினமொடு அவர்

அங்கத்தைக் காக்கைப் பொன் குந்துமணி தங்கம்
அழகு மயிலிறகு பூங்கொத்து மலர் துளிர்
அலங்கரிக்க அகமகிழ்வு பொங்கத்தம்
ஆவினத்தைக் கண்ணன் ஆவினமோடு ஓட்டி

காட்டில் அழகிய இடங்களைக் காணக்
கடுகிச் செல்லும் கண்ணன் பின்னே
ஓட்டமாய் ஓடி—உறி ஒளித்தும் களித்தும்
உவப்புடன் தோழர் வெகு தூரம் சென்றார்

*காட்டில் ஆய்ச் சிறுவர்களின் கேளிக்கைகள்*

கொம்பும் குழலும் ஊதிக் கொண்டும்
கொக்குகளுடன் போய் அமர்ந்து கொண்டும்
குயிலாய் வண்டாய்ப் பாடிக் கொண்டும்
குரங்குகள் போல் கிளை தாவிக் கொண்டும்

அழகிய மயிலுடன் ஆடிக் கொண்டும்
அன்னம் போல் நடை பயின்று கொண்டும்
நிழலைப் பார்த்து நகைத்துக் கொண்டும்
நீந்தி நீர்நிலை அளைந்து கொண்டும்

தவளைகள் போலத் தத்திக் கொண்டும்
தாவும் குரங்கின் வால் பற்றிக் கொண்டும்
கவலையின்றிக் கண்ணனுடன் தோழர்கள்
கலகலப்பாகக் காட்டில் திரிந்தனர்

## அச்சுதனுடன் வாழும் ஆயர்களின் புண்ணியப் பேறும் உயர்வுகளும்

அஞ்ஞானம் அற்றவர்க்கு
　　ஆத்மானந்த அனுபவமாய்
அடிமலர்ப் பணிவார்க்கு
　　அருளும் தெய்வமாய்
மாயையில் திளைத்தவர்க்கு
　　மானிடக் குழந்தையாய்
சாயல் மாறித் தோன்றும்
　　சற்குணன் ஜனார்த்தனனை

பிறவி பல எடுத்து
　　போதை மனம் அடக்கி
பிரம்ம நிட்டை பயின்ற
　　யோகிகளும் காணாத
பாதார விந்தத்தைப்
　　பரந்தாம மூலத்தைப்
பார்த்து மகிழ்ந்து உடன்
　　பாடி வாழும் பேறு பெற்ற

ஆயர்கள் செய்திட்ட
　　அளவற்ற புண்ணியத்தை
அளக்கத்தான் முடியுமோ
　　அதற்கு இணை எங்குமுண்டோ ?
வார்த்தையால் அதன் பெருமை
　　வருணிக்கத் தான் போமோ ? அவர்
வற்றாத தம் அன்பால் அவனைப்
　　பற்றாகக் கொண்டதனை!

## அகாசுரன் எதிர்ப் படுதல்

என்றவ்வாறு அவர்கள்
இன்பமாய் விளையாடுவதை
ஏற்காத மனமுடனே
எதிர்கொண்டான் அகாசுரன்
அமுதம் உண்டு வாழும்
அமரரும் கண்டு அஞ்சி
அவ்வசுரன் அழிவதனை
ஆவலாய் எதிர்பார்த்திருந்தார்

## அகாசுரன் கண்ணனை இனம் கண்டு மலைப் பாம்புக் குகையாய் உருமாறுதல்

பகன் பூதகன் என் தமையரைப்
பரலோகம் அனுப்பிய
பாலகன் இவனே இவனை இப்
பரிவாரமுடன் அழிப்பேன்
என்றந்த அகாசுரன்
ஏவப்பட்டவன் கம்சனால்
எண்ணித் தன்னுருவைத் தன்
இயல்பினால் மாற்றிக் கொண்டான்

ஒரு யோசனைத் தூரம்
உரு பருத்து விரிந்து
பெருமலை போலாகி
சிறு குகை வாய் திறந்திருந்தான்
அறியாச் சிறுவர்கள்
ஆய்ப் பாடிச் செல்வங்கள்
பெரிதும் வியந்து மலைப்
பெரும் பாம்பின் குகையிதுவோ ?

உண்மை மலைப் பாம்பானால்
உண்டுவிடும் நம்மை, நம்மை
உண்ணத் துணிந்தால் கண்ணன்
உதையால் நாசமடைந்து விடும்
என்று பேசி நகைத்துக் கொண்டும்
இருகை தாளம் கொட்டிக் கொண்டும்
சென்றார் கொடுவாய்க் குகை நோக்கி
சிறிதும் உண்மை உணராமலே!

கண்ணன் நிலைமையை உணர்ந்து
யோசித்து முடிவெடுத்தல்

பழுதெனக் கிடக்கும் பாம்பின்
பாங்கினை உணராப் பாலர்
அழுதிடும் முன் தாய் சென்று
அணைப்பது போலத் தாமும் –தம்மை
விழுங்கிடக் கிடக்கும் அசுரன்
விதி முடிக்கவா? விடவா? என்று
அழிவிலா முதல்வன் உள்ளம்
ஆர யோசித் தறிந்து

பகைவனை முடிக்கக் கருதி
பாம்பெனக் கிடக்கும் அசுரன்
குகைவாய் வழியே கண்ணன்
குழுவினைத் தொடர்ந்து செல்ல
அது கண்டு அமரர் கலங்கி
அச்சமுற்று அரற்றிடவே
மதி நலம கெட்ட கம்சன்
மனமது மகிழலானான்

## அகாசுர வதம்

ஆவினத்தோடு தோழர்
அனைத்தையும் விழுங்க எண்ணும்
அகாசுரன் தொண்டை அதனை
அடைந்து தன்னுருவைப் பெருக்கும்
அச்சுதன் செயலினாலே
அகாசுரன் மூச்சுத் திணற
அவன் தலை பிளந்து கொண்டு
அவனுயிர் எல்லாம் செல்ல

தம்மருட் பார்வையாலே
தன்னுயிர்த் தோழரோடும்
தம்முடை ஆவினமும் தானும்
தலைவழியே வெளிவரப்
பார்த்தனர் தேவர் அந்தப்
பாம்பினின் றெழுந்த ஒளியும்
பத்துத் திசையும் ஒளிரப்
பரமனைச் சேர்ந்த விந்தையை !

## கண்ணன் அகாசுரனுக்கு முக்தியளித்தல்

புனிதரால் அல்லாதாரால்
புரிந்திட இயலாத்தேவன்
மனிதரின் குழந்தையாக
மாயையால் தோன்றித் தன்னுடை
கனிவினால் கயவர் தம் மனக்
கசடினைக் களைந்து அவர்க்கும்
முனிவர்கள் அடையும் முக்தி
முழுநிலை யருளினானே!

## கண்ணன் தோழர்களுடன் வனபோசனம் செய்யும் தோற்றம்

பாம்பின் வாய் சென்று மீண்ட
பாலர் பசி யறிந்து கண்ணன்
தாம்புடை சூழ்ந்து செல்லும்
தங்கள் ஆவினத்தினோடு
ஆங்கோரிடம் அமர்ந்து
ஆற்றுவோம் பசியை –நம்
ஆவினம் அருகில் புல்லை
அசை போடட்டுமென்றான்

ஊதிடும் குழலை ஆடை
உடுத்திடும் இடையில் சொருகிக் கொம்
பூதியும், பிரம்பும் இடது
புயத்தின் கீழ் இடுக்கிக் கொண்டு
கையில் தயிர் மணக்கும் சாதம் ஊறு
காயுடன் களித்து உண்ணும்
மைவண்ணப் பிள்ளையாக
மதுசூதனன் பொலிந்தான் அங்கே!

அரவிந்த மலரின் நடுவே
அமைந்து மலர்தாங்கும் தண்டாய்
அரவிந்தன் அமர்ந்திருக்க
அழகிய இதழாய்த் தோழர்
அனைவரும் அவனைச் சூழ்ந்து
அமர்ந்து தம் உணவெடுத்து
அன்பினால் ஒன்று கூடி
அன்னத்தைப் புசிக்கலானார்

உண்டியின் சுவையை அவர்கள்
ஒப்பிட்டுப் பேசிச் சிரித்து – புவி
கண்டிட இயலாக் கண்ணன்
கார்முகில் வண்ணனுக்குத்
தொண்டுகள் செய்தும் கொண்டும்
தோழமையுடனே அன்பால்
உண்டுமே ஊருணிக் கரையில்
உல்லாசமாய் ஒன்றாயமர்ந்து

காணாமல் போன கன்றுகளை அழைத்து வரக்
கண்ணன் செல்லல்

இசைவாய் இருந்து கூடி
இனிமையாய் உண்ணுங் காலை
அசையிடும் ஆவினத்தை
அருகினில் காணாததால் –அச்சம்
பசையென மனதிற் படிய
பயந்த தோழரிடம் கண்ணன்
"அசைந்திடல் வேண்டாம் உங்கள்
அன்னத்தைப் புசிப்பிர் நம்மை

பிரிந்த நம் ஆவினத்தைப்
பிடித்து நான் கூட்டி வருவேன்
இருந்து நீர் உண்டு இங்கு
இளைப் பாறிக் காத்திருப்பீர்" என
மருந்தெனப் பிணிக்கு விளங்கும்
மாதவன் தன் தோழர் மனம்
பொருந்த நல் வார்த்தை சொல்லிப்
புறப்பட்டான் ஆவினத்தைத்தேடி!

அச்சுறுத்தும் அச்சத்திற்கே
அச்சமாய் இருக்கும் கோமான்
எச்சில் கை கவளத்துடன் தம்
இனிய ஆவினத்தைத் தேடி
மிச்சமின்றி மலை குகை
மேவு புதர் சந்து எங்கும்
கச்சிதமாய்த் தேடியலைந்தும்
கண்டிலன் ஆவினமோடு தன் தோழரையும்!

### கண்ணன் யோசித்து இது பிரமனின் மாயை விளையாட்டென்றறிதல்

ஆவினம் சென்ற தெங்கே ?
அவ்விடம் தான் அகன்ற பின்பு
ஆயநற் தோழர் குழு
அவரெல்லாம் சென்றதெங்கே ?
மாயமாய் அவர் மறைந்த
மார்க்கமும் என்ன வென்ற
மார்க்கத்தை மால் எழிற் கண்ணன்
மறையயன் செயல் என்றறிந்தான்

### அயனுக்கு அறிவு புகட்ட கண்ணன் லீலை

உலகினைப் படைக்கும் நான்முகன்
ஒருகணம் ஒளித்து வைப்போம்
உருவெழிற் சிறுவரோடு
உடனவர் ஆவினத்தை பின்
விளைவினை அறியாமையால்
விளையாட்டாய் மறைத்ததாலே
வித்தகக் கண்ணன் நம் கரு
வித்தென விளங்கும் மூர்த்தி

புவியினை ஆக்கி அதனைப்
புரந்திடும் பேரருளால்
நவிலத்தான் முடியா அன்பு
நல்லியல்பு கொண்ட ஆய்க்குல
அன்னையர்க்கும் ஆவிளம் கன்றின்
அன்னையர்க்கும் அருளிடவும்
அயன் மனமாயை நீக்கி அவருக்கு
அறிவினைப் புகட்டிடவும்

கோபாலன் அனைத்துமாக மாறுதல்

திருவுளம் கொண்டு கண்ணன்
திக்கெல்லாம் விளங்கும் மாயன்
அருவுரு ஆன அந்த
அச்சுதன் மனம் விழைந்து
ஆவிளம் கன்றாய்த் தன்னோடு
ஆடிய தோழர் தாமாய்
கோவேந்தன் கோபாலன் இரு
கூறாகி நின்றான் அங்கே !

தோழர்கள் உருவை யேற்ற
தோள் வலியான் அவர்போல்
தாம் சிறு உடலம் பெற்றவர்
தாமணி உடை அணி புனைந்து
கோல் குழல் கொம்பூதி உறியுடன் – அவர்
கொண்ட குண இயல்பும் கொண்டு
ஞாலமே விஷ்ணு மயமாய்
நந்தன் மகன் விளையாடி நின்றான்!

கோவினக் கன்றாய் அவற்றைக்
கூட்டி மேய்க்கும் பாலருமாய்
கோபாலன் தானேயான தன்
கோவுடன் சிறுவரைக் கூட்டி

கோபியர் மனம் மகிழக்
கோகுலம் தனை யடைந்தான்
கோலாகலமாய்த்தானே
கொம்பொடு குழலும் ஊதி

கோகுலத்திலும் கண்ணனின் மாயை லீலை!

அனைத்துயிரின் ஆத்மாக்களும்
ஆக இருக்கும் ஆலிலைக் கண்ணன்
ஆயர்கள் இல்லங்களிலே
ஆவுரு தாங்கி நின்றான்.
ஆய்ச்சியர் மகனாய் அவனே
அனைத்தில்லங்களிலும் வாழ்ந்தான் இந்த
அதிசய மால் விளை யாட்டிதை
அறிந்தவர் ஆருமிலர்!

மாயையைத் தோற்றுவித்து
மாயைக்கு உட்படாத
மாதவன் மகிமை யறியா
மாதரும் ஆவினமும்
தாய்ம்மை நற்பாசம் அவர்க்குள்
தனிப் புதுச்சுவையாய்ப் பெருக
வாய்ம்மையாய் அன்பைப் பொழிந்து
வளர்த்தனர் தத்தம் கண்ணனையே!

தன் மகவைக் காட்டிலும் முன்பு
தனிப் பிரியம் காட்டி கண்ணனைத்
தம் உயிர் போல் நினைத்த
தக்க எழில் ஆய்ச்சியரின்று
தம் மகவாய்க் கண்ணனிருக்கும்
தந்திரத்தை யறியாதவராய்த்
தம் மகவின் பால் பொங்கும் பாசம்
தணிக்க இயலாதவராயிருந்தார்

சிறுகொடி வளர்வது போல்
ஸ்ரீதரன் தன் மகவின்
உருவில் இருப்பதறியாது
உள்ளத்தில் கள்ளமில்லா
உத்தம கோபியரின்
உள்ளம் கொள்ளை கொண்டவனாய்
உலகெல்லாம் படைத்துக் காக்கும்
ஒருமுதல் ஓராண்டிருந்தான்

ஓராண்டுக்குப் பின் கோவர்த்தன மலையில் நிகழ்ந்தது

ஒருத்தி மகனாய்ப்
பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாய்
ஒளித்து வளரும்
தருக்கில்லா தாமோதரன்
உருமாறித் தம் மகவாய்
இருப்பதறியா இடைச்சியருடன் இளம்
பூரணன் இருக்கையிலே

கோபர்களின் கோவினத்தின் நிலை

ஆண்டொன்று முடிவதற்கு
ஐந்தாறு நாட்கள்முன்
ஆனிரை மேய்க்கக் கண்ணன்
அண்ணனுடன் வனம் சென்றான்
கோபாலன் பலராமனுடன்
கோ ஒட்டி மேய்த்திருக்க
கோவர்த்தன மலையின் மேல்
கோபர் மேய்த்த பசுக் கூட்டம்

கோகுலத்தின் அருகில் மேய்ந்த
கோவிளம் கன்றை இனம் கண்டு
கூவியழைக்கும் கோபர்
கூக்குரலைப் பொருட்படுத்தாமல்

தாவியோடித் தமை மறந்து
தாய்ப் பாசம் மிகக் கொண்டு
நோவளிக்கும் வேலி தடையையும்
நூதனமாய் தாண்டிச் சென்று தம்

ஆவி குளிர அன்பு மிகுந்து
அன்னை மடுதான் பொழிய
ஆவலாய்த் தம் கன்றினை
அடைந்து அகமகிழ்ந்திடவே
ஆவினத்தைத் துரத்தி வந்த
ஆயர்களும் அதிசயமாய்
அன்பான தம் மைந்தரெல்லாம்
அங்கிருக்கக் கண்டு மனம்

ஆனந்தம் பொங்க அவரை
அணைத்துத் தூக்கி மகிழ்ந்து உச்சி
அதனை முகர்ந்து கட்டித் தழுவி
ஆற்றமுடியா பாசத்தினால்
ஆனந்தக் கண்ணீர் மல்க
ஆவினமுடன் தாமும் நிற்க
அந்த நிலை கண்டு மிக
ஆச்சரிய மடைந்தவனாய்

## பலராமன் தன் ஞானத்தால் உண்மை அறிதல்

ஊட்டு மறந்த கன்றின் பின்
ஓடும் பசுப் போல அன்னை
ஊட்டும் முலைப் பால் மறந்து
ஓடும் மகன்மேல் பெருகும் தாய்ப்
பாசத்தை அதன் பாங்கினைப்
பகுத்தறிய முடியாதெனப்
பலராமன் எண்ணித் தன்
பளிங்கு மனக் கண் திறந்து

அங்கிருந்த ஆவினத்தோடு
　　　இளம் கன்றுகள்
அன்னையர் பிள்ளைகள்
　　　அவர் கைக்கோல் குழல் மீதும்
பங்கமின்றித் தம் மனதில்
　　　பாசம் பொங்குவதுணர்ந்து
தங்கக் கண்ணன் மயமாய்த்
　　　தரணி இருப்பதைக் கண்டான்

*பலராமன் கண்ணனிடம் கூறியது*

"நண்பரெல்லாம் தேவராக
　　　நம் ஆவினங்கள் முனிவராக
நானிலத்தில் இருப்பதாக
　　　நான் நினைத்தேன் பண்டு – ஆனால்
நந்தகுமாரனனே நாராயணனே – உன்னை
　　　நான் கண்ட கொண்டேனின்று
நானிலம் எங்கும்" என
　　　நாவினிக்க பலராமன் மொழிந்தான்

*கண்ணன் பலராமனுக்கு விளக்கம் கூறியது*

என்று சொன்ன அண்ணனைப் பார்த்து
இனிய கோபாலன் முறுவல் பூத்து
ஈராறு மாதங்கள் முன்பு இங்கு
இன்னின்னவாறு நிகழ்ந்த நிகழ்சிகள்

இவையிவை என அவற்றை விளக்கமாய்
எடுத்துக் கூற பலராமன் அதனை
ஏற்றுச் செவி மடுத்துத் தன்
இளவலுடன் நின்றிருந்தபோது

## ஒரு பிரம்மகணம் முடிந்ததும் பிரம்மன் வந்து காணுதல்

பிரம்ம கணம் ஓராண்டு
பெரு மாயமாய்க் கடந்திட
பிரம்மன் தன் கணக்குப்படி
பூ உலகம் வந்து காண – ஆ
வினமாய் ஆயராய் அங்கு
விளையாடிடும்
வித்தகக் கண்ணனின்
உத்தியால் வியந்து தம்

மாயையில் மயங்கிய
மாடுகளும் மேய்ப்பாரும்
மந்திரத்தால் கட்டுண்டு
மறைக்கப்பட்டுத் துயின்றிருக்க அவர்
சாயையை ஒத்த இவர்
சங்கதியை அறியாதவனாய்
ஓயாது உள் நினைத்தும் – அயன்
உண்மை உணர்ந்தானில்லை !

தான் கவர்ந்து சென்ற திரள்
தான் உண்மையானதுவா ?
தான் காணும் இக்குழுவே
தான் உண்மையானதுவா?
வான் வெளி எங்குமுள்ள
வைகுந்த மா மாயைத்
தான் மயக்கத் தன் மாயை
தனைக் களைந்து அயன் கண்டான்

## பிரமன் தன் பிழைக்கு வருந்தி கண்ணனைத் துதித்தல்

கண் எதிரில் கண்ட ஆவின்
கன்றுகளும் சிறுவர்களும்
கருமுகில் போல் கருத்துக்
கச்சிதமாய்ப் பட்டுடுத்தி
காண்கின்றார் கண்ணன்போல்
கனகாம்பர பீதாம்பரராய்!
தன்னுலகில் தன் அரியாணையில் (அயன்)
தன்னையே கண்ணனாய்க் கண்டான்!

கண்ணனாய் எதையும் கண்ட அயன்
கண் எட்டும் மயங்கிடும் வண்ணம்
எண்ணி நான்கு கரமது தனிலும்
ஏந்தி சங்கு சக்ரம் கதை கமலம்

குண்டலம், பதக்கம் கிரீடமோடு
குளிர்வன மாலை தானும் அணிந்து
மண்ணிலுள்ள அனைவருமே திரு
மாலவன் மாயக் கண்ணனாகத் தோன்ற

உள்மன உறக்கம் நீக்கி அயன்
உலகக் கண் திறந்து பார்த்தான்
உலகோர் வசிக்க உகந்த இடமாம்
உன்னத பிருந்தாவனமது தன்னில்
உலவும் கண்ணன் உண்மைப் பரம்பொருள்
உருவெளி எங்கும் கலந்து இருப்பவன்
களவாய் வெண்ணை திருடி உண்ட
கார்முகில் வண்ணன் கமலக் கண்ணன்

ஆடிடும் நாடகம் அதனில் அவன்தன்
ஆயநற் தோழரோடு ஆவினம் தன்னைத்
தேடுகிறான் இன்னும் கையிலோர் கவளமுடன்!—அத்
தேவனைக் கண்டு அயன் வாகனமிரங்கி

தங்கத் தடியினைப் போன்ற தன்னுடை
அங்கத்தைத் தரையதன் மேலே கிடத்தி
பங்கமில் நான்கு முடிகளின் நுனிகள்— கண்ணன்
பங்கய பாதத்தில் பட்டிட வணங்கி

ஆனந்தக் கண்ணீரால் அரிபாதம் கழுவி
அதன்பின் விழிகளை அயன் துடைத்துக் கொண்டு
தான் என்ற ஆணவம் அற்ற தலைகுனிந்து
தன் கை குவித்து நா தழு தழுக்கத் துதித்தான்

*அயன் கண்ணனைப் போற்றித் துதித்தல்*

"ஆதியும் அந்தமும் ஆனவரே உம்முன் —நான்
ஆடிய என்னுடைய நாடகமாம் பிழையை
சோதியே சோதிக்கும் நல்நீதியே — மது
சூதனரே சுந்தரரே பொறுத்து மறந்திடுவீர்

வீதிவெளியே மாயைக்கும் மாயாவியான
வித்தகனே உம்முடன் விளையாட நினைத்து —உன்
சோதி உமிழ்ந்த சிறுசுடரின் கூத்திது என்று
சொல்லி அயன் மனம் வருந்திச் சொல்வான்

ஆக்கும் தொழில் புரியும்
அயன் என்னும் ஆணவத்தால் என்
மூர்க்க குணத்தால் உன் மகிமை
முற்றும் உணராததால்
நீர்க்குமிழி போல என் செயல்
நீசமாய் அமைந்ததய்யா
பார்க்கும் பொருளில் எல்லாம்
படர்ந்திருக்கும் பரந்தாமா

என் பிழை தனைப் பொறுத்து
எளியேனைக் காத்திடுவாய்
தன்கரு கால் உதைக்க
தாய் வெருளுவது உண்டோ?
அண்டங்கள் உருவோ அருவோ
அனைத்தும் உன்னுள் அடக்கம்
ஆயர்கள் ஏறே உன்னுடைய
அன்பன் என்னைத் தள்ளிடாதே

உன்னையே அன்றி வேறு
உருவமும் உண்டோ எனக்கு
உன்னையே என்னில் காட்டி –என்
உன்மத்தம் ஓட்டிப் புவியில்
அருவமே ஆகி ஆயர்
அகந்தனில் வாழும் ஒவ்வொரு
உருவமுமாகிப் புல்லாங்குழல்
உரு முதல் பொருளுமாகி

நின்றனை! நின்றவாறே
நிறைத்தனை நெஞ்சமெல்லாம்
கன்றினை மேய்க்கும் கண்ணா
கரமது நான்கு கொண்டு
வென்றிட முடியா இந்த
வியனுலகனைத்து மாகி
நின்றனை நிலைத்து முடிவில்
நிறைந்த பரி பூரணமாய்

உன்னத குருவின் அருளால்
உபநிடத மாகும் கண்கள்
தன்னையே கொண்டு தன்னுள்
தங்கி இருக்கும் உண்மை
நன்கு உள் உணர்ந்து காணும்
ஞானியர் அன்றி இந்த
ஞாலமாம் வாழ்க்கைக் கடலை
யாருமே கடக்கப்போமோ?

ஆழி சூழ் உலகில் உதிக்கும்
ஆதித்யன் செயல் அல்லாது
நாளொடு இரவுமில்லை
நாயகனே நிலத்தில்
வாழும் இவ்வாழ்க்கையோடு
வானுயர் மோட்சம் தானும்
காலத்தின் மாயையாலே
காணும் மதி இரண்டெனவே

உள் மனம் உறையும் உன்னை
உணராது தன் உடலே என்று
மெள்ளவே நினைத்துத் தம்மை
மெத்தவே வருத்திக் கொண்டு
ஆத்மாவைப் பேதமாக்கி
அபரம் பரம் என்றே நோக்கி
அதனை வெளியில் தேடுகின்ற
அவர்கள் ஞானம் அடைவதெப்போ?

ஆதலால் ஆத்மாவாகும்
அனைத்துயிரின் முதலே
தீயிட்டு மனம் எரித்து
திருந்த நல் மதி படைத்தோர்
போய்விடும் அங்கமிதனைப்
புறமென ஒதுக்கித் தள்ளி
நீ உள்ளிருந்தியங்கும்
நித்தியத்தைக் கண்டு கொள்வர்

அருந்தவ ஞானியர் உள்
அறிந்திட்ட போதும் உன்
பெருந்திரள் பாதக் கமலப்
பேரின்பப் பிரசாதத்தை
அருந்தும் நல் பேறு பெற்ற
அவர் அறிவார் உன் மகிமை
அல்லாதார் யுகமாய்த் தவம்
ஆற்றிடினும் அறிந்திடாரே!

சித்தத்தின் சுத்தியாலே
ஸ்ரீதரா ஆயர் தம்முடைப்
பக்தியாம் மனதால் உன்னுடன்
பாடியும் ஆடிக்களித்தும்
நித்தமும் அவரோடிங்கு
நீரிருந்து வாழும் பேறு
மெத்தவே புண்ணியத்தால்
மேருமலை அளவே கொண்டார்

காணக் கண் கோடி பெற்றும்
காணுதற் கியலாதவனை
பேணவும் பேசிடவும்
பிள்ளை எனக் கொஞ்சிடவும்
ஆணோடு பெண்ணும் இருக்கும்
ஆவினம் ஜடப் பொருட்கள் யாவும்
ஆயர்தாம் பெற்றார் அவர்தம்
அனுபவத்திற்கிணை யொன்றில்லை!

குத்தமில் அன்பால் ஆய்க்குடி
குறும்பர்கள் பெற்ற பேற்றால்
நத்திடும் மனதால் அந்த
நந்தர்கள் அடிகழுவி
அத்திரு நீரால் அந்த
அழகிய பிருந்தா வனத்தில்
எச்சிறு பிறவி தன்னை
எடுத்தாலும் சிறப்புடைத்து

தன்முலை ஈந்து கொல்லும்
தந்திர பூதனைக்கே
தந்தாய் நீ முக்தி அவள்
தன் இருள் வம்சத்திற்கும் எனில்
தம்உயிர் உடல்பொருளும்
தமதென்ற எல்லாம் உமக்கே
தத்தென அளித்து உம்மைத்
தமதென ஆக்கி வாழ்ந்த

நந்தர் கோமான் குடிக்கும்
நல்லின ஆயர்கட்கும்
நயந்து பால்சொரிந்து உன்னை
நாடிய ஆவினுக்கும்
எந்த நற்கதியளிப்பாய்?
என்னென்ன பேறளிப்பாய்?
என்றெண்ணும் எம் மனது
இயங்காமல் மயங்குதன்றோ!

உன்னை நாடாதவர்கள்
உள்மன ஆசை எல்லாம்
கன்னம் வைத்துத் திருடும்
கள்வரை ஒத்த தாகும்
எண்ணத்தில் தூய்மையற்றார்
இல்லம் இருட்சிறையை ஒக்கும்
இடர்தரும் மதிமயக்கம் –அவர்
இருகால் பிணைக்கும் விலங்குமாகும்

பற்று நீர் அற்ற போதும்
பாரினில் உனைச் சரண்
முற்றுமே அடைந்தவர்க்கு
முழு நிறைவளித்து அவர்க்கு
வற்றாத பேரின்பத்தை
வழங்கிடும் வகையீதென்ற
நற்றவ நாடகத்தை
நடிக்கின்றீர் நாயகனே!"

## அயன் தான் ஒளித்த ஆயர் ஆவினத்தை அளித்து அரியை வணங்கி அமரலோகம் செல்லுதல்

அயன் தன் பிழையுணர்ந்து
அச்சுதன் அடி பணிந்து
அன்பாய்த்தன் பிழை பொறுக்க
ஆழ் மனதுருகி வேண்டி

பண்டு தான் ஒளித்த ஆயர்
பசுக்கள் ஆய்ச்சிறுவரையும்
கொண்டு வந்த பின்னே
கூறுகின்றான் நெகிழ்ந்து

"வில்நின்று கிளம்பிச் செல்லும்
வியத்தகு அம்பு போல
சொல்மிகக் கொண்டு உம்புகழ்
சொல்லிடப் போமோ எளிதாய்?
வல்லவர் யாரோ உம்மை
வாய்ம்மையால் அறிந்தார்? என் மன
வாக்கொடு காயத்தால் உம்
வைபவம் அறிந்தேனில்லை

விருஷ்ணி குலத்தாமரை இதழ்
விரித்திட உதவும் கதிரே
எரித்திட மறமாம் இருட்டை
எனவந்த எழிற் சுடரே!
நுரைத் தெழும் கடலாய் பூமி
நுண்மதியாளர் பசுக்கள் மனம்
நிறைத்திடும் மதியே நிதியே
நித்தியரே வணக்கம்"

என்றந்த கமலக் கண்ணன்
இயல்பினை இயக்கம் தன்னை
நன்றாக உணர்ந்து மகிழ்ந்து
நான்முகன் நயந்து சொல்லி
கன்றாகப் பசுவாய் தன்னைக்
காசினியாய்க் காட்டியவனை
நன்றாக வலம் வந்து பணிந்தபின்
நான்முகன் தன் உலகடைந்தான்

அயன் துதியைக் கேட்டு அவனை
அமரலோகம் அனுப்பிய பின்
அச்சுதன் முன்பிருந்த
ஆவினத்தை அழைத்துக் கொண்டு
ஆய்க்குடி சிறார் தம் அருமை
ஆன தோழர் காத்திருந்த
அந்த மணற்திடலினுக்கு
அவசரமாய் வந்து சேர்ந்தான்

### கண்ணன் கன்றுகளோடு திரும்புதல்

ஆண்டொன்று அவசரமாய்
ஆனதை அறியாது
ஆய்க்குலச் சிறுவர்கள்
அரைக் கணமே ஆனாற்போல
கண்ணன் அருள் மாயையினால்
களங்கமற்றுத்தானிருந்தார்
கண்ணனுடன் வரும் கன்றுகளைக்
கண்டார் மனம் களித்திடவே

### உலகில் மாந்தரின் பொது இயல்பு

உள் இருக்கும் ஆத்மாவை
உடலெடுத்த மாயையினால்
உள்மறந்து போகும் நிலை
உள்ளவர்கள் எதையறிவார்?
அள்ள அள்ளக் குறையா அன்பாம்
ஆனந்தமாம் ஆத்மன் தன்னை
உள்ளபடிக் காணா நிலைமை
உலகின் பொது இயல்பாகியதுவே

### கண்ணன் உண்மைத் தோழருடன் வீடு திரும்புதல்

புல்லாங்குழலோடு கொம்பூதி கோஷமிட்டு
பிள்ளைகளெல்லோரும் பிருந்தாவனம் விட்டுப்
பூக்கள் மயிலிறகு வர்ணத் தாதுக்கள் அலங்கரிக்கப்
புருஷோத்தமன் புகழைத் தோழர் பூரிப்புடன் பாடி வர

உற்சவம் போற் தோழர்
உற்சாகத்துள்ளலுடன்
உடன்வர கோபியர் தம்
உள்ளம் கவர் கள்வன்
நற்றவச் செல்வன் நலம்நிறை
நந்த கோகுலத்தின் நாயகன்
நந்தா விளக்கனையான்
நடந்து தன் மனை யடைந்தான்

### தோழர்கள் யசோதை நந்தரிடம் கண்ணன் மலைப் பாம்பைக் கொன்ற விந்தையைக்கூறல்

கோகுலம் வந்தடைந்த
கோபர்கள் ஒன்றாய்க்கூடி
கோகுலம் தனிலிருந்த
கோபர்கள் அனைவரிடமும்
கோபால கிருஷ்ணன் நந்த
கோபர் யசோதை மகன்
கொன்றான் மலைப் பாம்பை என்று
கொண்டாடிக் குதுகலித்தார்

### பலராமன் கண்ணனின் பௌகண்ட (5 முதல் 10 வயது) கால நிகழ்ச்சிகள்

ஐந்து வயது ஆனபின்னே
அண்ணனைப் போலக் கண்ணனுமே
ஆவினம் தன்னை மேய்க்கக் கற்று
அலைந்தான் பிருந்தாவனம் முழுவதும் – முன்பு

விந்தை செய்து விளையாடிய பாலன்
விரைவில் கண்டவர் வியக்கும் வண்ணம்
பாந்தமாகவேப் பசு ஓட்டி மிகப்
பாங்காவே பணியாற்றியிருந்தான்

கனிகளும், மலர்களும் தான் சொரிந்து
கழல் தழுவும் கிளை தளிர் கண்டு
கண்ணன் அண்ணனைத் தான் நோக்கிக்
கனிவுடன் சொல்வான் வருமாறு.

"எண்ணிலடங்காத எழில் நிறை வனமும்
இங்கிருப்பாரோடு தங்கும் பொருள் திசையும்
பண்ணிய பாவம் பறந்திடவே –நும்
பாதத்தினில் தலை பதித்தனால் அவை

புண்ணியம் மிகவே கொண்டதுவே –நும்
புனித நற்கருணை பார்வை பெற்று,
அண்ணலே உம்புகழ் மலை பெரிது" என
அண்ணன் பலராமனின் புகழ் படித்தான்

ஆனிரை அதனை ஒட்டிக் கொண்டு
ஆற்றங்கரை மலையடி வாரமெல்லாம்
ஆய்ச்சிறுவர் பலராமன் கண்ணன்
ஆனந்தமாய் விளையாடித் திரிந்தார்

அன்னம் போல் அவர் கூவிடுவர்
ஆடும் மயில் கண்டு ஆடிடுவர்
முன்னம் தொலை சென்ற நண்பர் பெயர் சொல்லி
முகில் போல் குரலில் முழங்கிடுவர்

ஆடிக் களைத்து அவர் அங்கம் கிடத்தி
வேடிக்கைத் தொண்டாய் வேண்டிக் கால் பிடித்து நீவி
ஓடிக்களைத்த அலுப்பு ஒருவாறு தீர்ந்தபின்
நாடிச் செல்வர் தம் நந்த கோகுலம் நோக்கி

தேனுகாசுரவதம்

பிருந்தாவனத்தில் கோகுலத்தில்
பிள்ளைகள் புகுந்து தினம் களிக்க
விருந்தா இருக்கும் அவ்வனத்தில் அவர்
விளையாடி ஆவினம்தனை மேய்க்க

பின்னோர் நாள் பனைமரம் நிறைந்த
பிறிதொரு இடமதை நாடிச் சென்றனர்
கண்ணனின் அண்ணன் பலராமன் தன்
கரவலிவால் மரம் உலுக்கப் பழம்

விழுந்தன கீழே அச்செயலால்
விரைந்து வந்த தேனுகாசுரன்
கழுதை உருவம் தானெடுத்துக்
கனன்று பலராமன் மேற்பாய்ந்தான்

கண்ணை முடித்திறக்கு முன்னே
கபடன் தேனுகாசுரன் பின்கால்
தன்னை உதைக்கும் முன் பற்றித் தன்
தலையைச் சுற்றிப் பனைமரங்களின் மேல்

எறிந்து கொன்றான் பலராமன் அவனை
எதிர்த்த அசுரத் தோழரை எல்லாம்
கரியென வலிமை மிகக் கொண்ட
கண்ணனும் பலராமனும் கொன்று வென்றார்

## காளியன்வதம்

அரவமொன்று முன் பெற்ற சாபத்தினால்
அதன் சொந்த உலகைத் தான் துறந்து
கரந்து ஓர் மடுவில் வாழுகின்றது
காளியன் என்னும் பெயருடனே

வீரியனான காளியன்தன்
விஷத்தீயின் கொதிப்பினால் மேலே
விரைந்து செல்லும் பறவையினமும்
வீழ்ந்து மடியும் வேட்டையாடினாற் போலே

அதன் விஷமே யமுனை நதி நீரில்
அப்பகுதியில் கலந்திருப்பதால்
அறிந்தோ அறியாமலோ எவராகிலும் நீர்
அருந்த அவர் இறந்து வீழ்ந்தார் அந்தோ!

அண்ணன் உடன்வரா ஓர் நாளில்
அச்சுதன் நண்பர்களுடன் சென்றான்
நண்பர்கள் தாகத்தைத் தீர்த்திடவே
நச்சுக் கலந்த யமுனை நதி நீரை

தம்முடைப் பசுக்களுடன் அருந்த
தம்முயிர் துறந்து தான் வீழ
தன்னையே நம்பிய நண்பர் நிலை
தனைக் கண்டு தயாநிதியாம்

கண்ணன் தன் அருட் கண்கொண்டு
கருணையுடன் அவர் தமை நோக்க
என்னே அதிசயம் ? அவர் எழுந்து வந்தார்
எமனிடம் சென்றவர் மீண்டு வந்தார் !

அதர்மத்தை அழிக்கவே அரியாம் ஆதி
ஆயர்பாடி தன்னில் அவதரித்து
ஆயர்குலக் கொழுந்தாக வளர்ந்து வருவதை
அரவத்தின் அட்டூழியம் கண்டு வெகுண்டு

நெடிய கடம்ப மரமேறி அந்த
நீல வண்ணக் கண்ணன் தானும்
கொடிய காளியனை அடக்கி ஒடுக்க
கொண்ட எண்ணம் செயற்படுத்திடவே

இடுப்பில் துணியை இறுக்கிக் கட்டி
இரு கை தட்டி விஷநீரில் குதித்தான்
மடுவில் இருந்த காளியனும் வெகுண்டு
மறுகணம் நீரின் மேற்பரப்பை யடைந்து

நாறும் தண் துழாய் மாலை மார்பன்
நாராயணன் இவன் என்றறியாது
நீரில் குதித்த மாதவனைத் தன்
நீள் உடம்பாலே சுற்றிக் கொண்டான்

ஊரும் உறவும் நண்பர் சுற்றமும்
உறைந்து பயத்தால் கதறியழ பக்தர்
கோரும் வரங்களைக் கொடுக்கும் நெடுமால்
கொஞ்சும் கலங்காது நின்றான் மடுவில்

யாதவர் நிலை

தம் உயிர் உடல் பொருள் கண்ணனுக்கே
தந்த நல் யாதவர் மனம் பதறி
தம்முயிர் போனாற் போலத் தாம் மயங்கி
தரைதனில் வீழ்ந்து செயலற்றிருக்க

கண்ணன் தன்னுருவைப் பெருக்க
கடுங்கோபமுடன் கண்ணனை விட்டு
காளியன் விலகிச் சென்றாலும் அனல்
கக்கும் விஷமூச்சு விட்ட வண்ணம்

தன் படங்களைத் தூக்கிப் பார்த்திருந்தான்
தன் பகைவனின் வலிமையை உணராமல்
கண்ணன் நாற்புறமும் சுழலுவதைக் கண்டு
காளியன் கடிக்கக் காத்திருந்தான்

பின் சுழன்று கண்ணனைத் துரத்தியதால் –அவன்
தன்பலம் குறைந்து சோர்ந்த நேரத்தில்
கண்ணன் எழில் கார்முகில் வண்ணன்
கடுகிச் சென்றான் காளியன் அருகில்

கண்ணன் காளியனைப் பணிய வைத்து அவன்
கனத்த தலைமீது ஏறி நின்று
ஆடுகின்றான் நடனம் அதிவேகமாய்
அனைத்துக் கலைகளுக்கும் மூலமானவன்

பங்கயக் கண்ணனின் பாத கமலங்கள்
பாம்பின் இரத்தினத்தால் மேலும் சிவக்கப்–புவி
எங்குமுள்ளவன் இணையேதுமில்லாதவன்– தன்
அங்கத்தில் ஆட அந்த வேதனையால் தன்

படமெல்லாம் ஒடியத் தம் பலமெல்லாம் குறைய
பாலனல்லன் இவன் பரந்தாமன் தானென்று
படித்து மனதால் கண்ணன் பாதம் சரண் என்றே
பக்குவத்தைப் பெற்றான் பாம்பான காளியன்

காளியனுக்குப் பாடம் நன்றாகக்
கற்பித்தபின்னே
கண்ணன் தன் கழலைச் சரண்
என்று தான் பணிந்த
காளியன் அவன் மனைவி உற்றார்
உறவுடன் கூடி
கடலில் சென்று வாழ வழி
கூறி அருளினான்

நாகபத்தினியருடன் காளியனுமே
நந்த கோபாலன் இணை அடி பணிந்து—பின்
வேகமாக யமுனையை விட்டு விலகிடக் – கண்ணன்
தேகம் பட்டதாலே நதியின் நச்சும் அகன்றதம்மா!

## பிரலம்பன் வதம்

பால கோபர்கள் பின்னொரு நாளில்
பலராமன் கண்ணனுடன் சேர்ந்து ஒன்றாகப்
பசுக்களை ஓட்டி மேய்த்தவாறு
பலவிதமாக விளையாடும் போது

பிரலம்பன் என்னும் அரக்கன் கண்ணனின்
பிரியமுள்ள அண்ணன் பலராமனைப்
பிரித்து எடுத்துச் செல்லும் எண்ணமுடன் —அப்
பிள்ளைகள் போல் உருத்தாங்கியே வந்தான்

தூணிலும் துரும்பிலும் இருக்கும் அரி —அந்தத்
துர்மதியாளனை இனம் கண்டு கொண்டான்
காணினும் காணாதவன் போல அக்
கயவனைக் சூழ்ச்சியால் கொல்ல நினைத்து

நண்பனைப் போல் அவனை
ஏற்றுக் கொண்டு
நாம் பிரிவோம் இரு
கட்சிகளாக
தோற்றவர் வென்றவரை
எல்லை வரையில்
தூக்கிச் சென்று
விளையாடுவோமென்றான்

பலராமன் ஒரு கட்சித் தலைமை யேற்கப்
பரந்தாமன் மறுகட்சித் தலைவனானான்
சொன்னபடி தோற்றவர்கள் வென்றவரைச்
சுமந்து சென்றார் எல்லைவரைப் பிறர் கண்டு நகைக்க!

பரந்தாமன் பாலகிருஷ்ணன் தானும் தோற்றுப்
பந்தயப்படி ஸ்ரீதாமாவைச் சுமந்து சென்றான்
பத்ரசேனன் விருஷபனைச் சுமந்து செல்ல
பிரலம்பன் பலராமனைத் தூக்கிக் கொண்டு

எல்லையைத் தாண்டியதும்
இறக்கி விடாமல்
இறக்கை முளைத்தாற் போல் – வானில்
கவர்ந்து செல்லவே
தொல்லைகளைத் துடைத்தெறியும்
பலராமன் வெகுண்டு
தொன்மையான வஜ்ராயுதத்தால்–மலையைப்
பிளப்பது போல

தன்னிருகை முஷ்டி கொண்டு
தாக்கியே திட்டமாகத்
தன்னைக் காத்துக் கொண்டு
பிரலம்பனை வீழ்த்த

கண்விரித்து வியந்து இதைக்
கண்ட தோழர்கள்
களிப்புடனே "நன்று" என்று
கலந்தொன்றாய்க் கூறினர்.

பிருந்தாவனத்தில் மழைக்கால வருணனை

உயிர்கள் தோன்றி வளர
உகந்த கருவியா இருந்து
பயிர்கள் செழித்து வளர்ந்து
பசுமை நற்கோலம் பூண
விண்ணது அதிர, சர
வெடியென இடிமுழங்க
கண்பறிக்கும் மின்னலுடன்
கார்காலம் துவங்கியது

இடிமின்னலோடு மேகம்
இருந்ததால் இரவியோடும்
துடியாக விண்மீன் மதியும்
துலங்காமல் இருந்த நிலையது
நெடியமால் வண்ணனாக
நின்ற பரப்பிரம்மம் தன்னைக்
கடினமுக்குணங்கள் மறைக்கும்
காரியத்தை ஒத்திருக்க

புவியுள்ளோர் கட்டும் வரியைப்
பூதலத்து மன்னன் வாங்கி
பரிவுடன் பார்த்து அவர்குறை
பக்குவமாய் நீக்குதற் போல்
பூ மகள் நீரை உண்டு
புவிக்கு ஒளி உமிழும் கதிரோன்
தூ மழையாகப் பெய்தான்
தோன்றி நாலிரு திங்களிலே !

கருமுகில் மேகம் மின்னல்
காற்றினால் அலைக்கப்பட்டு
பெருநிதி கருணையர்போல் –மழை
பெய்து உயிருட்டப் புவி
ஒரு விருப்பம் தான் ஈடேற
உடல்மெலியத் தவமே செய்தார்
அருள் நிறை ஆசியாலே
அவர்தவம் பலிக்கப் பெற்றதாய்

வெயிலினால் காய்ந்துலர்ந்து
விரிசலும் கண்ட நிலமும்
மயிலது கண்டு ஆடும்
மழையது பெய்யக் கண்டு
விரிசலும் நீங்கி நிலத்தின்
விளைச்சலும் ஓங்க அதுதான்
அரி அருட் பொலிவே போல
அம்மழைப் பெருக்கால் விளங்க

அரிபுகழ் வேதம் அதனை
அறிந்திடா அதர்மக் கலியின்
அளவுதான் மிகுந்ததாலே
ஆகமம் மறக்கப்பட்டு
கரிய நெடும் இருள் திரையால்
கண் சிமிட்டும் தாரகை கிரகம்
அறிய முடியாதிருக்க
அலையும் மின்மினி அங்கொளிரும்

*தவளைகள் சப்தித்தது*

நித்திய கருமம் முடித்து
நீங்கா அன்புடைய சீடர்
சத்தியர் குரு மொழியால்
சத்தமாய் ஓதும் வேதம்போல்

கத்துதலை மறந்து முன்பு
கண்முடிக் கிடந்த தவளை
கத்தும் மேகக் குரல் கேட்டுக்
கண்திறந்து கத்தினவே

சிற்றாறுகளில் நீர்ப்பெருக்கம்

தன்னிச்சைப் படித்திரியும்
தனயனிடம் தனம் சேர்ந்தால்
மன்னுலகில் தம் நிலையறியாது
மதியிழந்து ஆடுதற்போல்
தண்ணீரின்றி வரண்டிருந்த
தனிவாய்க்கால் சிற்றாறுகளை
நன்னீரால் மழை நிரப்ப அவைதம்
நடைமறந்து ஓடினவே

புவியாவும் கோவேந்தன்
புடைசூழ் சேனையால் நிறைந்து
புகழ் இந்திர கோபப்
பூக்கள் அதனாற் சிவந்து
கவிந்து குடை போற் தோன்றும்
காளான்களும் மிகுந்து
சுபிட்சமாய் உழவர் மகிழும்
சொர்க்கமதாய் விளங்கியது

செல்வந்தர் மனநிலை

ஆயினும் உழைப்போ அவ் வுழைப்பின்
அருமையோடு பெருமை உணரா
நோய்மனம் கொண்ட செல்வர்
நூதனன் அருளின் கொடையைத்
தாமறியா மதியால்
தண்மழைக் காலம் அவருக்கது
தீயெனத் துன்பமெனவே
தேர்ந்தன அவர்தம் உள்ளமே!

கண்ணனின் பாத சேவைக்
கண்டுளம் பொலிந்தாற் போல
எண்ணிலடங்கா உயிர்கள்
எல்லாம் இப் புது நன்னீர்
தன்னிலே தாம் நனைந்து
த்னிப் புது பொலிவு பெற்று
மண்ணிலே ஒளிரும் காட்சி
மாமழை நேர்த்தியன்றோ!

## கடல் கலங்கியது

பக்குவம் அடையா உள்ளம்
படைத்த சில யோகியர் தாம்
பார்த்திடும் பொருளால் மனம்
பாதிக்கப் படுதல் போல
அக்கம் பக்கமிருந்து
அடித்துவரும் நதி நீர்க் கலப்பால்
அலைக்கின்ற காற்றால் அலையால்
அலைகடல் கலங்கியதுவே

## மழையால் மலை அசையாதிருத்தல்

சித்தம் ஒன்றி ஹரியைச்
சிக்கெனப் பிடித்தார் மனது
சிக்கல்கள் ஏதுமின்றிச்
சிறப்புடன் திகழ்தல் போன்று
மெத்த வேகமாய் மலையின்
மேல் மழைதான் பொழிந்தும்
குத்தமில்லார் மனம் போல் –மலை
குலுங்காமற் கிடந்ததுவே!

### பாதைகள் புற்களாலும் செடிகளாலும் மறைக்கப்படுதல்

வேதத்தை விற்பனர்கள்
விரும்பி ஓத மறந்தால்
விளைந்திடும் ஊறெனவே
வேதமும் மறையுமாப் போல்
விளங்கின பாதை எல்லாம்
வெளி, வழி யாதுமின்றி
வேகமாய் வளரும் செடி கொடி
வெற்றுப் புல் மூடியதாலே

### மின்னல் மேகத்தை விட்டு விலகுவது

சத்பதி யான போதும் தம்
சஞ்சலம் செய்யும் காம
துர்புத்தியாலே மாதர்
துறந்துமே விலகுதற்போல்
அற்புதம் செய்யும் மேகம்
அதனுடன் ஒன்றி மின்னல்
நிற்பதை விடுத்துச் சலன
நிலையினை அடைந்தன்றோ!

### உள்ளிருக்கும் ஆத்மனால் திசை பொலிந்து திகழுதல்

அருவமாய் நாண் இருக்க
அழகிய இந்திரவில்
இருப்பது போல விண்ணில்
இயல் முகில் முழக்குடனே
உருவமே இல்லா ஆத்மன்
உலவும் முக்குணத்துட் புகுந்திட
திருவென விளங்கி எங்ஙனும்
திசையெலாம் பொலிந்ததுவே!

## கார்கால வருணனை

உயிரினம் அனைத்தும் மகிழ
ஊற்றெனப் பெய்த மழையால்
பயிரினம் செழித்து மேலும்
பல்வளம் பெருகக் கண்டு
உயிரதன் அணுக்குள் அணுவாய்
உறைந்திடும் ஆத்மன் தன்னுடை
உள்மனம் மகிழ்ந்து மழையின்
உயர்வினைப் புகழ்ந்தான் நன்கு!

அண்ணன் பலராமனுடனே
ஆயர் பாடி தனிலே
தண் மழைக் கால மதனைத்
தாம் கழித்தே இருக்க
விண்ணது தெளிந்து மேகம்
விலகிட ஒளிரும் வானாய்
கண்ணுக்கினிமை நல்கும்
கன்னியென வந்தது கார்காலம்

மறந்த தவயோகத்தை மீண்டும்
மனதுதான் கற்றுத் தெளிந்து
நிறைந்திடும் யோகியர் போல்
நின்று கொட்டும் மழையால்
கலங்கிய நீர் நிலைகள்
கமலத்தை ஏந்தியே பின்
பளிங்கெனத் தெளிந்து ஓடப்
பாரில் வந்தது கார்காலம்

விண்ணினை மறைக்கும் மேகம்
விரைவினில் விலகப் பெற்றும்
மண்ணில் வாழ் உயிரினங்கள்
மனக்கலக்கம் அகலப் பெற்றும்

புண்ணிய பூமியில் சகதி
புழுநிறை சேறு காய்ந்தும்
மண்ணிலே இருக்கும் நீர் நிலை
மாசுகள் அகலப் பெற்றும்

நண்ணியே கண்ணன் பாதம்
நாடியே வணங்குவோர்கள்
பண்ணிய பாவமகன்று
புண்ணிய மாவதுபோல்
மண்ணில் வாழ் நான்கு வகை
மனிதரின் மாசு நீங்கத்
திண்ணெனத் திசை பொலியத்
திருவென வந்தது கார்காலம்

தவமது செய்யும் முனிவர்
தம்மன ஆசை அனைத்தும்
தாம் அற்றுக் களைந்ததாலே
தாம் பெற்ற அமைதியைப் போல்
தம்முடை உடைமையாகும்
தாகத்தைத் தணிக்கும் நீரை
தரணியில் பொழிந்து மேகம்
தான் வெண்மையாய் விளங்க

மழைக் காலம் முடிந்ததால் அனைவரும்
தத்தம் கடைமையைத் துவங்குதல்"

ஆயுளால் அவதியுற்று
ஆத்ம ஞானம் பழகும்
ஞானியர் ஆயுள் முடிவில்
நற்கதி தேகம் தன்னைத்
தாமடைந்தாற் போல்— மழையால்
தடைப்பட்ட தம் கடமை
கோவேந்தர் வணிகர் முனிவர்
குறைவின்றிச் செய்யலானார்

## விண்மீன்கள் தோற்றமும் கண்ணன் தன் தோழருடன் வனம் சென்று குழலூதுதலும்

கண்ணனைச் சூழ்ந்திருந்து
களிக்கும் விருஷ்ணிகளைப் போல
விண்ணிலே மதியைச் சுற்றி
விளங்கின விண்மீன்கள் யாவும்
பண் என ஈர்க்கும் அந்த
பால கோபாலன் கண்ணன்
தன்னுடைத் தோழர் அண்ணன்
தம்முடன் ஆவினமும் கூட்டி

### வனத்தின் எழில்

அன்றலர்ந்த மலரிதழ் மேல்
அமர்ந்து தேன் பருகும் வண்டினம்,
நிமிர்ந்தே மழையைத் தாங்கி
நின்றுமே வென்ற மலைகள் –பொழுது
புலர்ந்திடும் முன் எழும்பும்
புள்ளினக் கூட்டின் பாடல்
வளர்ந்த நெடு மரவேர் தொட்டு
வளைந்து செல்லும் நதிகள்

அடங்கிய வனமதனுள்
ஆயர் சிறுவர் சென்றார் –இயற்கை
அழகினைப் பார்த்து ரசித்து
ஆனிரை ஓட்டிக் கொண்டு
யதுபதியான கண்ணன்
யசோதை அருமை மைந்தன்
மதுவினைப் போன்று மனதை
மயக்கிடும் குழலிசைத்தான்

### குழலூதும் கண்ணன் எழிற் தோற்றம்

கற்றைக் கருங்குழலில் –மயிற்
கண் எனப்படும் பீலி
மற்றை இரு காதில் அன்று
மலர்ந்த கர்ணிகைப் பூக்கள்
சற்றே இறங்கி இடையில் நற்
சரிகையாலான பட்டு
குற்றமில்லா வைஜயந்தி
குளிர்மாலை மார்பில் துலங்க

கொவ்வைச் சிமிண்வாயில்
குவிந்த சிற்றிதழ்கள்
செவ்விய மூங்கில் தந்த
சிறு துவாரமுடைக் குழலைக்
கவ்வில் பிடித்தூத
காசினியிலுள்ளோர் மனதைக்
கவ்விப் பிடித்திழுக்கும்
கான மழைதான் பொழிந்தான்

### கண்ணனின் குழலிசையில் மயங்கிய ஜீவராசிகளின் நிலை

கண்ணனின் கருணை ததும்பும்
கனிவாயின் குழலிசையால்
தம்மை மறந்து பசுக்கள்
தம் செவி தூக்கி நின்று
அண்ணலின் அழகைக் கண்கள்
அதுகொண்டு தான் பருகி அவன்
அதரமிருந்து பொங்கி வரும்
அமுத இசை செவி மடுத்து

தம் உள் மனம் உருகித்
தளும்பி கசிந்து மகிழத்
தக்க சிறு கன்றுகளோ
தம் பால்குடியை மறந்து
கொண்ட வாய்ப் புல் நழுவ
கோவினம் மேய்ச்சல் விட்டு
அண்டசராசரத்தில் சிறு
அசைவுமின்றித் தான் நிற்கும்!

கண்ணனின் இசையும் அதன் மேன்மையான விளைவுகளும்

கண்ணனைக் கண்டு அவன் வேணு
கானத்தைக் கேட்பதற்காகத்
தன் உரு ஒளித்து விட்டுத்
தவமுனிவர் புள்ளினமாகத்
தளிர் இலை தாங்கும் மரத்தின்
தக்க கிளையில் அமர்ந்து
வெளியுலக ஒலி ஒதுக்கி
வேணுகானம் கேட்கின்றாரோ?

குழலினை ஊதிக் கொண்டு
கோவினம் ஓட்டிச் செல்லும்
அழகிய கண்ணன் அவனுடை
அண்ணன் பலராமன் வனத்தில்
குழுமியே செல்லக் கதிரோன்
கொளுத்திடக் கண்டு அன்பால்
குடையெனத் தன்னுடலைக்
குவித்ததோ மேகமது?

வேய்ங்குழல் இசையில் மயங்கி
வேகமாய்த் தொடரும் கோபர்
ஆய்க்குல அம்பு ஆன
அண்ணன் பலராமனுடனே

மேய்ந்திடும் ஆவினமும்
மேவியே தமை மறந்து
ஓய்ந்திடா மனதில் உவகை
ஊற்றெனப் பெருக ஆயர்

தலைக்கயிற்றைக் கழுத்தில் சுற்றித்
தம் கால் கயிற்றைத் தலையில் சுற்றித்—தம்
நிலை மறந்து நினைவில் அரியாம்
நித்தியனின் இசையில் ஒன்றி
சிலையெனவே இயக்கமற்றுத் தம்
சித்தம் இசையில் சொக்கிடவே
மலையளவு மகிழ்வு பொங்கத் தம்
மனம் லயித்து மயங்கினரோ!

கலகலவென நகைத்துக்
கடுகியே ஓடும் நதிகள்
கண்ணன் குழல் இசையில் மயங்கி
காமமே கொண்டாற்போல
வேகத்தைக் குறைத்துச் சுழன்று
வீணாய் அவ்விடத்தே நின்று தம்
மோகத்தைக் காட்டுமாப்போல்
முழு மலர்க் கமலம் தன்னைத் தம்

அலைக்கரம் தன்னிற் தாங்கி
அச்சுதன் பதமலரில்
நிலைத்திட நினைத்து அவருடை
நீளடி தழுவினவோ
என்றெல்லாம் கண்ணன் கானம்
இசைப்பதைக் கானகத்தில்
கண்டுமே கேட்டவர்கள்
கருத்துப் பரிமாற்றம் செய்தார்

*கண்ணனின் இசையில் லயித்த மனங்கள்*

*கண்ணனாய் பாவனை மாற்றமடைதல்*

கண்ணன் குழலிசையில்
கருத்தொன்றிய காரிகையர்
கமலக் கண்ணனை,
கார்முகில் வண்ணனை
எண்ணி அவன் உரு நாளும்
ஏத்தி தம் இதயம் ஒன்றி
பண்ணிசையாற் பாடி அவன்
பாவனையாய் மாறினரே!

*கன்னியரின் காத்யாயினி நோன்பும்*

*கண்ணன் அவர்க்கு அருளியதும்*

மாதங்களில் சிறந்த
மார்கழி பிறந்திட
மங்கையர் கோகுலத்தின் இன
நங்கையர் தாமெல்லாம்
மாமாயன் மாதவனை
மணாளனாகத் தாம் பெறவே
மனம் குவித்துக் காத்யாயினி
மஹாயோகினி நோன்பெடுத்து

கதிர் உதிக்கு முன்னே அவர்
கண் விழித்தெழுந்து
மதிமுகம் மறையுமுன்னே
மணிப்பிரவாகமாகத் தான்
குதிபோட்டு ஓடும் யமுனைக்
குமரி நதி யடைந்து தமக்குப்
பதி நல்ல விதம் அமையப்
பனி நீராடியபின்

காத்யாயினி உருவத்தைக்
கச்சிதமாய் அமைத்து மண்ணில்
கண்கவரும் மணமிகுந்த
மலரிட்டுத் தூப தீபம்
காட்டி அன்பாய் நிவேதனம்
கருத்துடனே தானளித்து
கண் மனம் கவர்கள்வன்
கண்ணனையே கணவனாய்ப் பெற

கரம் கூப்பிச் சிரம் தாழ்த்தி
கசிந்த உள்கனிந்துருகி
காத்யாயினி மந்திரத்தைக்
கன்னியர்கள் தாம் செபித்து
காத்யாயினி மஹாமாயே
காத்தருள் யோகின்யதீஷ்வரி என
கழலிணையை அருச்சித்துக்
கரம் குவித்துப் பூசித்து

கோபியர் தம் சித்தத்தைக்
கோபாலன் மேல்வைத்து
கொண்டல் வண்ணனை – மணம்
கொள்ள கோரிக்கை வைத்து
ஆவினம் போல அந்த
ஆய் இளம் நங்கையர்
அதிகாலைப் பொழுதினில்
அனைவரும் ஓர் கூட்டாக

கண்ணன் புகழதனைக்
கருத்துடனே பாடித்தம்
கரங்கள் இணைத்துத் துயிலும்
கன்னியர் பெயர் விளித்தெழுப்பி
மார்கழி நீராடி நிறை
மங்களம் பெற விரும்ப
மணிவண்ணன் அவர் விரதம்
சித்தி பெறும் வகை செய்ய

## கண்ணன் கோபியர் ஆடை கவர்ந்து அறிவுறுத்தியது

கன்னியர் தம் ஆடைகளைக்
களைந்து கரை வைத்து விட்டுத்
தண்ணென்ற நீரிலிறங்கி
தாம் நீராட ஓர் நாளில்
கண்ணன் தன் தோழருடன் வஞ்சியர்
களைந்த ஆடைகளைக் கவர்ந்து
கதம்ப நெடு மரத்திலிட்டு
கண்ணனும் அம்மரம் அமர்ந்து

கன்னியரைத் தோழருடன்
கண்டு தாமும் நகைத்து
காரிகையரை விளித்துக் கண்ணன்
கார்முகில் வண்ணன் சொல்வான்
"கன்னியரே காத்யாயினி
கடிவிரத மிருந்து களைத்தீர்
கரையேறி வந்து நும் ஆடை
கை நீட்டிப் பெற்றுக் கொள்வீர்"

### கோபியர்கள் கண்ணனிடம் கூறியது

கண்ணனின் மொழி கேட்டு
கன்னியர்கள் தாம் நாணி
கழுத்தளவு நீரில் தம்
கனியுடலை நிறுத்தி அவர்
"கண்ணா, உனக் கழகோ?
கள்ள மனமோ, தர்மம் தானோ?
கரையில் எம் ஆடை விட்டுக்
கடுகி நீ சென்றிடுவாய்

இந்நாள் வரை உன் புகழை, எம்
எண்ணம், சொல் செயலதனால்
ஏத்திக் தொண்டு செய்தோம் உனக்கு
இதை நீ யறிவாய் கண்ணா
மண்ணாளும் மன்னனிடம் குறை
மணிவண்ணா சொல்வோம் நாங்கள் அது
தன்னாலே எம் ஆடைகளைத்
தளரவிட்டுச் செல்க என்றார்

இவ்வாறு உரைத்த கோபியருக்கு எழிற்
கண்ணன் உபதேசித்தருளியது.

"பொன் நகை அழகு மங்கும்
புன்னகை மனமுடையீர்!
என்னை நீர் அறிவீர் அதனால்
எனக்கடிமையாய் என் சொல்
தன்னையே நம்பி, அதன்
தன்மையே மதிப்பீராகில்
நன்மையே விளையும் உமக்கு
நங்கையீர் கரையேறுக!

அழகிய நங்கையீர் நீர்
ஆடையின்றி நீராடியது
அப்பழுக்கில்லாத் தேவதையரை
அவமதித்த பாவமாகும்
அத்தகைய பாவம் நீங்கி உம்
ஆத்மா சுத்த லயமடைய
அஞ்சலிப்பீர் இருகரம் கூப்பி
அத்தேவதையரை நீர்" என்றான்

கண்ணன் கம்பீரமாகக்
கண்டிப்பாய்ச் சொல்லிடத் தம்
கருத்திலுள்ள களங்கத்தைக்
கன்னியர்கள் அகற்றிவிட்டு

ஒரு கையால் உடல் மறைத்து
மறுகையால் வணங்கிடவே
தருமத்தைப் புகட்ட வந்த
தாமோதரன் மீண்டும் சொல்வான்

அண்டம் படைத்தவனை,
அறிய ஒண்ணாதவனைக்
கண்டொரு கையால் வணங்கும் உம்
காரியம் தவறு என்றும்
தண்டம் அதற்குண்டு
தரித்திடல் அக்கரமதனைப்
பண்டைத் தருமமிது" எனப்
பாவையர்க்குக் கண்ணன் விளக்கி

"நீர் இழைத்த இரு பாவம் தன்னை
நீக்கிட நீர் விழைந்தீரென்றால்
நீர் இரு கரமது கூப்பி
நியமமாய்த் தான் வணங்கி
நீரினைவிட்டு நிலம் வந்து
நிர்மலமாய் நும் ஆடை
நீர் பெற்றுக் கொள்க" என்ற
நீல வண்ணன் சொல் கேட்டு

"கோபியரின் தூய அன்பும் உளப் பாங்கும்"

சகலமும் கண்ணனுக்கே என
சங்கற்பித்திருந்த பெண்கள்
சங்கடமேது மின்றி
சாந்தி மனம் மேவிக் கொண்டு
அகமும் புறமும் கண்ணன்
அவனின்றி ஏதுமற்ற
அகநிலைப் பொலிவால் வந்து தம்
ஆடையினைப் பெற்றுக் கொண்டார்

கன்னியர் மனக் கலக்கமின்றிக்
களங்கமும் இல்லாதவராய்க்
கண்ணன் உரையேற்றுப் பின்
கரையேறி வந்ததனால்
கண்ணன் மனம் மகிழ்ந்து
கன்னியர் மனம் குளிரக்
கனிவாய் அவர் விருப்பம்
கச்சிதமாய்த் தான்முடிய

கோபியருக்கு அவர் விரதமிருந்த பலன் கிட்டும்
என கண்ணன் அருளியது

எண்ணித் தூய்மையாய்
இது நாள் வரை கோபியர்
இருந்த நோன்பு கைகூடும்
இகத்தில் அவர் மனம் கசிந்து
பண்ணிய நற்கருமத்தால், அவரின்
பரிசுத்த நன் மனதால்
பதியாகத் தன்னைப் பெறும்
பாக்கியம் தானடைவர்

தன்னையே எண்ணி அத்
தையலர் தம் சித்தமது
புண்ணியமான அன்பு
புதுப்புனலாகப் பொங்கும்
திண்மையால், திருநிறைத்
தீங்கில்லாத் தவத்தினால்
மண்ணிலே மீண்டும் பிறந்து
மாளும் வாழ்வு நீங்கி உய்வர்

என்று தம் அன்பர்க்கருளும்
இனியவன் இருடிகேசன்
"நன்று, என் அன்பு மிக்க
நங்கையீர் செல்வீர் இல்லம் —இனி

நின்று வரும் முழுநிலா இரவில்
நீர் இருந்த விரதப் படி
ஒன்று கூடி நாம் களிப்போம்''
என்று கண்ணன் விடையளிக்க

கண்ணனின் ஆணையேற்றுக்
கன்னியர் யாவருமே
கண்ணனின் கமலப் பாதம்
தன்னையே தியானம் செய்து
கண், மனம், மெய் அனைத்திலும்
கண்ணனை நிறைத்துக் கொண்டு
கன்னியர் வருத்தமுடன்
கடுகியடைந்தார் கோகுலமே

*கண்ணன் மரங்களின் பெருமையைப் புகன்றது*

தேவகி பெற்ற மைந்தன்
தேவாதி தேவன் பின்னால்
ஆவினமோடு தோழர்
அண்ணன் பலராமனோடு குயில்
கூவிடும் பிருந்தாவனமாம்
குளிர் சோலை விட்டு வெளியில்
ஆவியே சோர வெயிலில்
அலைந்துமே களைப்புற்றுப் பின்

தேடியே வந்து ஓர் சோலை
திண்ணமாய் மரத்தின் நிழலில்
கூடியே நின்று நண்பர்
குழுவினைப் பார்த்துச் சொல்வான்
நாடிவந்தடைந்த நமக்கு
நற்குடை நிழலளித்து
வாடிடாதருளும் இம் மரங்கள்
வானளாவும் புகழுடைத்து

நிழல் தரும் மரமோடு
அதன் பட்டை
நிற்கும் வேர், மரவுரி,
கிளை, கட்டை
அழகிய இளம் தளிர் இலை,
மலர், கனிவகை என
அனைத்தையும் புவிக்கு
அளித்துத் தாங்கும்

இம்மரத்தின் அங்கம் அனைத்தும்
இகத்திலுள்ளோர் எவர்க்கும் அவரவர்
தம்மனதின் விருப்பம் தன்னைத்
தளர்வின்றி அளிக்கும் பாங்கும்
நன்மையே பிறர்க்களிக்கும்
நல்லிதயம் கொண்டருளும்
தன்மையை நாமுணர்ந்து
தருமநெறித் தடம் பற்ற வேண்டும்

என்றுமே சொல்லி கண்ணன்
இலை, தளிர், மலர்கள் தாங்கி
நன்றாகத் தாழ்ந்து நின்று
நிழல் தரும் கிளைகளிடைத்தம்
கன்றோடும் தோழரோடும்
கலந்துரையாடிக்கொண்டு
சென்று யமுனை நதியில்
சிறந்த நீர் பருகிய பின்

அருகில் ஓர் வனத்தை யடைந்து
ஆவினம் மேய விட்டான்
அனைவருக்கும் பசியெடுக்க
அச்சுதன் பலராமனிடம்
வருத்திடும் பசியைப் போக்க
வழியொன்று செய்யுமாறு
உருக்கமாய் வேண்டும் தோழர்
உறுபசி நீக்க எண்ணி

கண்ணன் அவ்வனத்தில் யாகம் செய்யும்
அந்தணரிடத்தில் அன்னத்தை யாசிக்கத்
தோழரை அனுப்புதல்

ஆகம வேதம் மறந்த
அந்தணர் அருகினிலே
ஆவலாய்ச் சுவர்க்கம் வேண்டி
ஆங்கொரு வேள்வி செய்வர்
அங்கு நீர் விரைந்து சென்று
அண்ணன் பலராமன் பெயரும்
அன்பன் என் பெயரும் சொல்லி
அன்னத்தை யாசிப்பீர் என

கண்ணன் சொற்கேட்டு பசிக்களைப்பையும், மறந்து
தோழர்கள் கண்ணன் சொல்லிய வண்ணம் செய்தல்

பசியைத் தணிக்க உதவும் அன்னம்
பக்கமிருப்பதை அறிந்த தோழர்
அசதியை அகற்றி நடந்து
அடைந்தனர் வேள்விக்கூடம்
புசித்திட அன்னம் வேண்டிப்
பூசிக்கும் வேள்விக்கூடமடைந்தங்கு
வசித்த அந்தணர்முன் வீழ்ந்து
வணங்கிப் பின் மொழிந்தார் பணிவாய்

தோழர்கள் கண்ணன் சொல்லிய,
வண்ணம் செய்தல்

"நாயன்மீர் நாங்கள்
நந்தபாலனின் சேவகர்கள்
நாடிவந்தோம் இங்கு
நயந்து பலராமன் அனுப்ப

நாயகர் இருவரும் எம்
ஆவினம் காத்திருக்க
நாங்கள் வந்தோம் அவர்க்காய்
நல் உணவினை யாசித்தே"

## அந்தணர் அகநிலை

என்ற இடையரின்
எளிமையின் சிறப்பை
இயல்பை யறியாது அங்கு
இருந்த அந்தணர்
நன்றாய்க் கேட்டும்
நல்லதை அறியும்
ஞானமில்லாமையில்
வாளாயிருந்தனர்

தேசம், காலம், திரவியம், ருத்விக்
தேவதை, அக்னி, எசமான், யாகதர்மம்
யாவுமான நிர்மல பரமன் – தம்மிடம்
யாசித்ததைத் தீரயோசியாத அந்தணர்

தம்சிறு பலன் கருதித்
தாம் இயற்றும் வேள்வியே
தக்க ஞானமின்மையால்
தரணியில் சிறந்த தென்று
எண்ணிய அந்தணர் அந்த
இடையரின் பசியைப் போக்க
அன்னமிடாது அவரை.
அனுப்பிப் பின் வேள்வி தொடர்ந்தார்

## சிறுவர்கள் கண்ணனிடம் முறையிட

[illegible]

இச்சையாயத் தாம் சென்று அன்னம்
  இரந்த விதம் தன்னைக்
கச்சிதமாய் சிறுவர் சொல்லக்
  கண்ணன் கேட்டு நகைத்துப், பின்
அச்சமின்றி நீர் செல்வீர்
  அந்தணர் பத்தினியரிடம்
மிச்சமின்றி நும் பசியை
  மெல்லிடையார் களைவாரென்றான்

கண்ணன் சொன்னபடி
  கண்டு சொன்னார் ஆயர் –பதி
கருமத்தில் பங்கேற்கும்
  தரும பத்தினியரிடம்
''புண்ணியம் செய்தவரே,
  புனித பிராமண பத்தினியரே,
எண்ணி ஓர் காரியம்
  ஈடேற யாம் வந்தோம்

அருகே ஓர் வனத்தில் எம்
  ஆவினம் மேய்த்துக் கொண்டு
அண்ணன் பலராமனுடன்
  கண்ணன் இருக்கின்றான்
பருக நீர் பெற்றும்
  பசியால் வாடும் எம்மைப்
பார்த்துப் பசியாறிடுக
  பத்தினியரிடம் சென்று'' என்றான்

ஆயர்கள் சொற்கேட்டு
  அத்தனை பத்தினியரும்
அச்சுதன் அருகிருக்கும்
  அற்புதத்தை அறிந்ததனால்

காயும் வெயிலில் மழைக்
கருணை முகிற் கண்டாற்போல்
கண்ணன் புகழ் கேட்டிருந்த
கற்புடைய மாதர் களிப்புடனே

அந்தணப் பத்தினியர் கண்ணனுக்கு
அன்னம் கொண்டு வருதல்

சுவைமிக்க அன்னங்களைச்
சுத்தமாய்த் தனிப் பாண்டமிட்டு
அவை எடுத்துத் தான் சென்றார்
அலை கடல் கலக்கும் நதியெனவே
சுவையான அன்னத்தைச்
சுமந்து வந்த சுமங்கலிகள்
"இவையாவும் கண்ணனுக்கு"
என்று நினைத்து ஒன்றி வர

அன்பால் முறுவல் பூத்து
அச்சுதன் அவரை வரவேற்று
அவர் உள்ளம் அதில் உறையும்
அன்பின் புனிதம் தனையறிந்து
அரியும் மனம் மிக மகிழ்ந்து
ஆதரவாய் அச்சுமங்கலிகள்
அமரும்படி உபசரித்து, தன்னால்
ஆகும் செயல் யாதென வினவினான்

கண்ணன் சுமங்கலிகளுக்கு உபதேசித்தல்

"தன் ஆத்மாவில் எனை நினைத்து
தான் உணர்ந்த விவேகியர்க்கு
தனக்கு நன்மை பயப்பதறியும்
தன்னுணர்வாம் நுண்ணறிவால்

தணியாத பக்தி யன்றித்
தாமேதும் தான் வேண்டார்
தக்க நிறைப் பெண்டீரே
தருமமிது உலகில் அறிவீர்

உடலொடு சுற்றம் நட்பு
உயிர், புத்தி, மனம் எல்லாமே
கடலென நிலைத்த ஆத்மாவில்
கலந்ததால் சிறந்ததானது
ஆகவே நீர்யாக சாலைக்கு, உம்
அந்தணப் பதி செய்யும் யாகத்தை
யோகமாய் உம்முடன் இணைந்து முடிக்க
வேகமாய்ச் சென்று உதவிடுவீரென்றான்

அந்தணக் குலப்பெண்கள் கூறியது

கோபாலன் கூற்றைக் கேட்டு நற்
குலவதிகளாம் அந்தணப் பெண்டிர்
கூறினார்கள் மனமது நொந்து —"நீர்
கூறும் குறிப்பினில் நியாயமில்லை
கொண்டல் வண்ணா உம்மைக் கண்டு, உம்
கொஞ்சும் சலங்கையணி பாதம் தன்னில்—முன்
கூடியிருந்து பின்னே விழுந்த
குளிர் மாலையினைத் தலைமேவ வந்தோம்

எம்முடைச் சுற்றம் சொந்தம் எம்மை
ஏசிய போதும் தூசென எண்ணி வந்தோம்
ஏன் இந்தப் பட்சம் ஏழை எம் மீதில்
எம் மனம் குளிர்ந்திட எமக்கருள் புரிவீர்"

என்று அந்தணப் பத்தினியர் மனம்
ஒன்றி உள்ளம் உருகிக் கூற
கன்றுக் கிரங்கும் தாயெனக் கண்ணன்
கனிவுடன் சமாதானமாக மொழிந்தான்

## கண்ணன் அந்தணப் பத்தினியருக்கு சமாதானம் சொல்லி அனுப்பி அவர் அளித்த உணவைத் தோழர்களுடன் புசித்தல்

"கள்ளம் இல்லா மனதால் என்னைக்
கணமும் நினைத்துக் காணத் துடித்து
உள்ளன்பால் எம் உறுபசி நீக்க
உண்டியளித்தீர் வந்தனம் உமக்கு— உம்

உள்ளம் மெய்யன்பால் நிறைந்து கனிந்து
உருகித் தொழுது பாடி என்னுடை
அருளை இவ்வுருவினில் காணும் பக்தி நீர் என்
அருகினில் இருப்பதால் அடைவது இல்லை

ஆகவே அன்னையரே, உம்
அகம் செல்வீர் இன்று நீர்
அளித்த இவ்வன்னமே உம்
அன்பின் சின்னம்" எனப்
போகவே சொல்லி மாதர்
போனபின் மாதவன்
பொங்கும் பசியடக்க அன்னம்
பகிர்ந்தளித்துப் புசித்தான் தானும்

### அந்தணர் தம் தவறுணருதல்

தாம் சொன்ன சொல்லை மீறித்
தம் பத்தினியர் சென்ற பின்
தம் மனதில் அமைதியற்றுத்
தவிக்கலானார் அந்தணர்கள்
பலராமன், கண்ணன் பண்பை
பராக்கிரமத்தைக் கேட்டு அவர்கள்
பாலர் சமானியரல்லர்
பாதகம் நாம் செய்து விட்டோம்

அந்தணராகப் பிறந்தும் வேத
ஆகமங்கள் அதனைக் கற்றும்
மந்திர உபதேசம் பெற்றும் –மன
மாயையை நாம் அற்றோமில்லை
சுந்தரக் கண்ணன், பலராமன்
சொல்லின் உட் குறிப்புமுணரா –நாம்
அந்தணராகப் பிறந்தும் பயன்
அற்றவராகி விட்டோம் –நம்

அந்தணர் தம் பத்தினியரை மெச்சித் தம் பிழை நினைந்து புலம்புதல்

பத்தினியர் பார்வை அருள்
பக்குவத்தைப் பெற்றது. அதுவே
வித்தை அன்றி நாம் கற்ற
வித்தையெல்லாம் சொத்தை, அவர்
தவமோடு ஆத்ம விசாரம்
தக்க உபதேசம், அனுட்டானம்
தர்ம சாத்திரம், குருகுல வாசம்
தாம் ஏதும் செய்தாரில்லை

ஆனாலும் அப் பெண்டிர்
அன்பென்னும் ஆழ் மனதால்
தானாக உணர்ந்து, தக்க
தவநெறி தாம் நின்றார்
வீணான அகங்காரம்
வேர்விட்ட மனதினால்
நாணாமல் நாம் நடந்து
நம் பெருமை குலையக் கண்டோம்

மனிதர்க்கு நாம் குருவாய்
மந்திரங்கள் கற்றிருந்தும்
மாயைத் தன் வலை வீழ்ந்து
மயங்கி நிலை குலைந்தோம் யாம்

கனிவான நம் மாதர், நம்
கண்டனத்தைப் புறக்கணித்து
கண்டு கொண்டார் பக்தியாலே
கண்ணனோடு பலராமனையும்

இயமனுடைய பாசக்கயிறு —என
இருக்கும் இல்லறத்தின்
இனிய பந்த பாச மது
இற்று விழ, மாதர் பக்தி
அமையப் பெற்ற விந்தை இந்த
அனுபவம் பேருண்மை, இது
அவனருள் மாயை லீலை, இதை
அறியாமல் போனோமே நாம்!

வேண்டுதல் வேண்டாமை
இல்லா இறைவன்
வேண்டி நம்மிடம்
யாசித்த சூக்குமத்தை
தேடிச் சென்று அன்னம்
திருப்தியாய் அளித்து நம் மனம்
திருந்திட உதவிய நம்
தேவியர் நாம் பெற்ற பேறு

அலைமகள் தன்னுடைய
அலையும் மனம் ஒதுக்கி
அன்பாலே அனுதினமும்
அச்சுதன் பாதம் வருட
அம் மாயன் நம்மிடம்
அன்னத்தை யாசித்துத் தூய
அன்பினை, பக்தி தனை
அறிவுறுத்தினானன்றோ!

தேசம், காலம்
மந்திரம், தந்திரம்
தேவதை, அக்னி
எசமான் ருத்விக்
திரவியம், தருமம்
ஆகிய வடிவினன்
தேடி யதுகுலம்
வந்து பிறந்ததை

திண்ணமாய் முன்பு
கேள்விப் பட்டிருந்தும்
தேவ மாயையால்
தெளிவற்றிருந்து விட்டோம்
"தேவரே எம்மைத்
தேடி வந்து எம் மனம்
திருத்திய தெள்ளமுதே
திருவடி பணிந்தோம்"

என்று பல சொல்லி
அரற்றினர் அந்தணர்
இனியவனை உணராத்தம்
இயல்பினை எண்ணி
வெட்கமுடன் மன
வேதனை மிகுந்து
விழிநீர் மல்க வாய்
மொழியற்றுக் கலங்கி

கண்ணனின் மாயைத் தம்
கண்களை மறைக்கக்
கருமத்தில் சுழலும்
கதியற்ற அந்தணர்
காசினி எங்கும்
வியாபித்திருக்கும்
கண்ணனின் அகண்ட
பேரறிவை அறிந்து

அந்த மன்னனின் மாயை
லீலையில் மாட்டிய
அந்தணர் தம்பிழை
தாம் உணர்ந்து அன்பால்
வந்தனை கண்ணனை
நினைந்துச் செய்து அவனை
வந்து கண்டிட
மனம் மிக விழைந்தும்

மன்னனாம் கம்சனின்
மமதைக்கு அஞ்சித் தம்
மனமது உருகியும்
மார்க்கமில்லாமையில்
கண்ணனைக் காணச்
சென்றாரில்லை அவர்
கல் மனம் கசிந்து மெய்
கண்டு கொண்ட பின்னும்

பிறப்பில்லாக் கருமுதல்வன்
பேரருளாளன் புவியில்
அருமை நற்றோழனாக
அன்னையர்க்குப் பிள்ளையாகத்
தருமத்தைத் தான் உணர்த்த –புவி
தாங்கக் கண்ணனாக வந்து, தன்
திறமையால், திருவாய் ஆய்க்குடி
தினமும் மகிழ உடனிருந்தான்

## கோபர்கள் இந்திர பூசைக்கு ஏற்பாடு செய்தல்

கோகுலத்தில் அண்ணனோடு
கூடி இருக்கையில்
கோபர்கள் இந்திரனைக்
குறித்து யாகம் செய்திட

வேகமாய் வேண்டும் பல
ஏற்பாடு செய்வதை
மேக வண்ணக் கண்ணன் கண்டு
மேன்மை மிகு நந்தராம் தன்

கண்ணன் நந்தரை வினவுதல்

தந்தையினை நோக்கித் தனயன்
ஆவல் தன்னாலே
"எந்தையே பரபரப்பு ஏன்?
என்ன ஏற்பாடிவை?"
என்று கேட்கும் மைந்தனாம்
இனிய கண்ணனிடம் –நந்தர்
"நன்றாய் நாம் வாழப் பெய்யும்
நனி சிறந்த மழைக்கு அரசன்

நந்தகோபர் கண்ணனுக்கு இந்திர பூசை
பற்றிக் கூறுதல்

இந்திரன் அவன் நாமம்
இந்திர லோகத்திற்கதிபதி அச்
சுந்தரன் சொல் ஆணை யேற்று
சூல் கொண்ட மேகங்கள்
வந்து மழை எனப் பெய்து நாம்
வாழ நீரை வழங்குபவை
அந்த மேகத்திற்கதிபதியை
அவனளித்த நீரால் விளைந்த

நம்தனம் எனப் பெற்ற பொருட்களை
நாமவனுக் களித்துப் பணிதல்
அந்த நாள் முதலாய் நாங்கள்
ஆண்டு தோறும் செய்தல் வழக்கம்

சிந்தை அவன் குளிர்ந்தால் இந்த
　　ஜெகம் அனைத்தும் குளிரும் என
வந்து அவனை நம்மைப் போல
　　வணங்குவார் பிற மானிடரும் என்றிட"

## கண்ணனின் மறுமொழியும் பின் விளைவுகளும்

நந்தர் இந்திர பூசை செய்தால்
　　நன்மை விளையும் என்று கூறிட
சுந்தரக் கண்ணன் நந்தரின் மைந்தன்
　　சுத்தன் தன் மனம் உரைத்தான் வருமாறு
"நாடும் ஊரும் நமக்கில்லை
　　நல்ல கிராமம் வீடுமில்லை
காடு மலை கழனிகளிலே
　　காலமெல்லாம் நாம் வாழுகின்றோம்

தேடி நாம் அலைந்து திரிந்து
　　திரவியம் இதனைச் சேகரித்தோம்
பாடுபட்டு நாம் ஈட்டிய பொருளைப்
　　பரிசென இந்திரனுக் களிப்பது வீண்!
எங்கும் உள்ளவன் ஏவிய வாறே
　　இயற்கை மழையைப் பொழிகின்றது
இயற்கையை மாற்றிட இயலா இந்திரன்
　　ஏற்றிடப் பூசை அளிப்பது எத்ற்கு?

பொங்கும் மெய்யன்பால்
　　பொருந்தி உடன் வாழ்ந்து
தங்களால் இயன்ற
　　தக்க சிறு உதவி செய்யும்
மங்காப் புகழுடை
　　மறையவர், ஆவினம்
மற்றும் மலைகளும்
　　மதிக்கத் தகுந்தவை

ஆகவே நமக்கென்றும்
ஆதரவாயிருக்கும்
அந்தணர் தம்மோடு
ஆவினம், மலைகளைத்
தாம் நாம் முறையுடன்
தக்க யாகம் செய்து
தரிசித்து வலம் வந்து
தலை வணங்குதல் நியாயம்

இந்திரன் யாகத்துக்காய்
இதுநாள் வரை சேகரித்த
அந்தப் பொருட் கொண்டு
அற்புதமாய் யாகத்தை
வந்தனைக் குரியவரே
வணக்கமுடன் நாம் செய்வோம்
வற்றாத அவர் அன்பால்
நற்றவமாய் நாம் வாழ

*கண்ணன் யாகம் செய்முறையை விளக்குதல்*

மறையோதும் அந்தணரால்
மாண்புமிகு நெருப்பில் ஹோமம்
முறையாகச் செய்தபின் யாகம்
முழுமை யாகும் பொருட்டு
குறையாத அன்னம் தன்னைக்
குறைவின்றி அந்தணர்க்குக்
கறவைப் பசுக்களோடு
காணிக்கையாய் அளித்திடுக!

சண்டாளர், நாய், கீழ்ச்
சாதியென ஒதுக்கப்பட்டோர்
திண்டாடாமல் அவருக்கும்
திருப்தியாய் உணவளித்து, நாம்

கொண்டாடும் ஆவினங்கள்
கொள்ள வாய்ப் புல் அளித்து
பண்டே இருக்கும் மலைக்குப்
பலி கொடுத்து அதன் பின் நீர்

சரிகைப் பட்டாடை உடுத்தி
சந்தனம் உடலிற் பூசி
அரி என அலங்கரித்து
அன்னம் வயிறார உண்டு
கிரி அந்தணர், பசுக்கள்
கிளர்ந்தெரியும் நெருப்புத் தன்னையும்
துரிதமாய் வலம் வருதல்
தூய்மை யுறும் வழி என்றே

எனக்குத் தோன்றுதப்பா
இவ்வித யாகம் செய்தால்
இணக்கமாய் இருக்கும் பசுக்கள், தம்
எழிற்துலங்கும் மலைகளோடு
வணக்கமாய் வேதம் கற்ற
வல்லுனர் அந்தணருக்கும்
எனக்குமே மகிழ்வளிக்கும்''
என்றுமே கண்ணன் சொல்ல

கோபர்கள் கண்ணன் சொற்படி நடத்தல்

இளையவன் ஆன போதும்
இனியவன் சொன்ன யாக
இயல்பினைப் பொருத்தமென
ஏற்றுக் கொண்டு நந்தர்,
கோபர் முதலானவர்கள்
கோபாலன் கூற்றுப்படி
கோகுலத்தில் யாகத்தைக்
குறைவின்றி நிறைவேற்றி

இந்திரன் தன் கருவத்தை
இல்லாமற் போக்குவதற்காய்
இவ்வாண்டு யாகத்தை
இந்திரனுக்குச் செய்யாமல்
நந்தர் மகன் கோபாலன்
நயம்பட உரைத்தவாறே
சிந்தை குளிரக் கோபர்
சித்தம் லயித்துச் செய்து

அந்தணர் ஆசி பெற்று
ஆவினம் தான் மகிழ
அவற்றிற்கும் புல்லளித்து
அவற்றையும் முன் நடத்தி
சந்ததமும் அசையாமல்
சலியாமற் கிடக்கும் மலையை
நந்தர்கள் வலம் வந்து
நற்பலி அளித்து வணங்க

சூடகம், தோள்வளை
சுந்தரச் செவிப் பூ, தோடு
பாடகம் முதலாகப் பற்
பல அணி புனைந்து வண்ண
ஆடையும் தாம் உடுத்தி
அலங்கரித்துக் கோபியர்கள்
அழகான வண்டிகளில்
ஆனந்தமாய்ப் பாடிவர

நந்த கோபாலனாக
நானிலம் காணும் கண்ணன்
நந்தர் முதலானோர்கள்
நம்பிக்கைப் பெறும் வகையில்
சுந்தரன் பெரிய தொரு
சுத்த உருதனைக் காட்டி, கோபர்
வந்துறும் அம் மலையில்
வாழும் தேவதையெனவே

தன்னைக் காட்டி அவர்
தாம் கொணர்ந்த பலிப் பொருட்கள்
தமை அவர் மகிழ்வாய் ஏற்று
தாம் அனைத்தையுமே உண்டு
தன்னோடு உடன் வந்துள்ள
தக்க கோபர்களுடன்
தானும் அவ் வுருவுக்குத் தன்
தலை வணங்கிச் சொல்வான்.

## கண்ணன் அம் மலையின் தன்மையைச் சொல்ல ஆயர்கள் மலையை வணங்கிச் செல்லுதல்

"எண்ணம் போல் வடிவெடுத்தல்
இம்மலையின் சிறப்பு இதனை
ஏற்காமல் அவமதிக்கும்
இயல்பினரை அழித்து விடும்
திண்ணமாய் நன்மை யெல்லாம்
திருவெனப் பெற்று வாழ
தீதில்லா மலை வணங்கித்
திரும்பிச் செல்வோம்" என்றான்

## இந்திரன் கோபமும் விளைவும்

தனக்கு ஆற்றப் படும் பூசைத்
தடைப்பட்டுப் போனதால்
தாளாத சினமதுவே
தான் கொண்டு இந்திரனும்
தன் ஆணைப்படி நடக்கும்
தண் மேகம் கொண்டு மழை
தனைப் பொழிந்து கோகுலம்
தனை வெள்ளக் காடாக்கினான்

## கோபர்கள் கிருஷ்ணனிடம் சரண்புகுதல்

பெருமழை பெய்து வெள்ளம்
பெருகியே ஓட, மழை
அருவியெனக் கொட்ட, காற்றால்
ஆயர்தம் உடல், மனம் வாட
திருவெனத்திகழ்ந்து தம்மைத்
தீமையிலிருந்து காக்கும்
மருவில்லா மாதவனை
மாயவனைச் சரணடைந்தார்

## கண்ணன் கோபர்களைக் காப்பதைத் தன் விரதமாகக் கொள்ளல்

அரண் என்று அடைந்த இவரை என்
அற்புதத்தாலே காப்பேன்
சரண் என்று வந்த இவர்கள்
சஞ்சலத்தை நான் களைவேன் –என்
திறமதனை இவர்கள் காணத்
திருத்தமாய்ச் செய்வது என்
விரதம் என்றே மனதில்
விளங்கு எழிற் கண்ணன் எண்ணி

## கண்ணன் கோவர்த்தன மலையை எடுத்துக் குடையாய்ப் பிடித்தல்

பூமியிற் புற்களிடையே
பூத்த நாய்க்குடையைச் சிறுவர்
பிடுங்கியே எடுத்தாற்போல
பூதலத்தின் நாயகனும்
பெயர்த்திட முடியா மலையைத் தன்
பிஞ்சு விரலதனால்ப் பெயர்த்து
அயர்ச்சியின்றிக் குடையாய்
அனைவருக்கும் பிடித்து நிற்க

## இந்திரன் கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாய்ப் பிடித்ததைக் காணுதல்

கண்டனன் அதிசயத்தைக்
கண் ஆயிரம் கொண்டவனும்
கொண்டல் வண்ணம் மகிமை
கோபாலன் சிறு உருவம்
அண்ட சராசரத்தில்
அசைந்திடாதிருக்கும் மலையைத்– தன்
சுண்டு விரலால் தூக்கிச்
சுந்தரன் குடை பிடித்ததை!

## இந்திரன் சினம் நீங்கி உண்மையறிதல்

பார்த்ததை இந்திரன் மனம்
பகுத்துமே உணர்ந்ததனால்
ஆர்த்திடும் வெள்ளம் பெருகி
அலைகடலென ஓடிடவே
நீர்த்தாரகை பொழியு மேகத்தை
நிறுத்திட ஆணையிட்டுத் தன்
ஆத்திரம் தனை யடக்கி
அறிந்தான் அச்சுதன் திறத்தை

பேய் மழை,பெருமழையும்
பெய்யாமல் நின்றுவிட
தாயெனத் தம்மையெல்லாம்
தக்கவிதமாய்க் காத்த
சேய், மகன் கண்ணன் திருச்
சேவடியின் புகழ் பாடி
ஆய்நிரை ஓட்டி, மலைக்குடை
அதனின்று வெளிப்போந்து

## கண்ணன் கோவர்த்தன கிரியை நிலத்திலிட இந்திரன் தன் செயலுக்கு வெட்கிக் கண்ணனைப் பணிதல்

நின்ற ஆயர் காணக் கண்ணன்
நிலத்தில் குடை மலை தன்னை
முன்போலவே வைத்துப் பின்
முகுந்தன் இதழ் சிரித்திருக்க
கன்றின் இளம் களிப்புடைய
கண்ணன் மாயச்செயலால் மனம்
குன்றி மத மனமடக்கிக்
கூறுகின்றான் இந்திரனும்

"அகிலத்தின் தந்தையாக
ஆசானாக, ஈசனாக
அடாத செயல் ஒடுக்கும்
அந்த கால ரூபியாக
சகலமு மாகிப் புவியைச்
சந்ததமும் காத்தருளும்
சர்வேசா! என் கர்வமதை நீ
சாகடிக்கப் புரிந்த லீலை.

அடியேன் ஐஸ்வரியத்தால் பெற்ற
அகந்தை என்னும் அழுக்காறை
அழித்து முற்றும் அகற்றியது.
ஐயனே! என் பிழை மலையை
அச்சுதா நீர் பொறுத்து
அருளுவதோடல்லாது
அகங்காரம் இனி என்னை
அணுகாமல் காக்க வேண்டும்

நன்றாய் நானுணர்ந்து கொண்டேன்
நந்தர் கோமானின் குமரா
கன்றோடு ஆயர்க்கதிபதியே
களங்கமில் வசுதேவர் நிதியே

இன்றுன்னை நான் கண்டு கொண்டு என்
இறுமாப்புத்தான் அழியப் பெற்றேன்''
என்று கூறி இந்திரன் தன்னுடை
இருகரம் கூப்பி கண்ணனை வணங்க

கண்ணன் இந்திரனிடம் கூறியது

செய்த பிழை யுணர்ந்து, தன்
சித்தம் தெளிந்து இந்திரன்
கையது கூப்பித் தன்னிரு
கழலிணையைப் பணிந்திடவும்
மைநிறை வண்ணன் கண்ணன்
மனமது மகிழ்ந்து சொல்வான்
ஐயா இனி நீர் கருவமற்று
"அலையா நிறைகுடமாய் இருப்பீர்''

இந்திரன் கண்ணனுக்குக் கோவிந்தன் எனப்
பட்டம் சூட்டி அபிஷேகம் செய்தலும்
இயற்கையில் உண்டான மாறுதல்களும்

மாண்புடைக் கண்ணன் சொல்லை
மதித்துமே இந்திரனும்
வான்புகழ் அதிதி முதலாம்
வகையொடு தேவர் ரிஷிகள்
தான்புடை சூழக் கண்ணன்
தனக்கு அபிஷேகம் செய்து
வான்முதல் வைகுந்தனுக்கு
வழங்கினான் 'கோவிந்த' நாமம்

அத்திரு வேளை தனிலே
அழகிய நதிகள் பெருக
அருகினில் மரங்கள் தாமும்
அமுதமாய்த் தேனைப் பெருக்க

உழுதிடா தரிசு நிலமோ
உவப்பினால் தானிய மளிக்க
பழுதிலா மலையில் உள்ளே
பளீரென இரத்தினம் ஒளிர

திருமஞ்சனம் கண்ணனுக்கு
தேவேந்திரன் செய்ததாலே
தீ மனம் கொண்ட உயிரும்
தூய்மையாய்ச் சலனமின்றி
இருந்திட இந்திரன் கண்ணன்
இணைமலர் தனைப் பணிந்து
விருப்புடன் சென்றடைந்தான்
விண்ணகரைத் தேவர் சூழ!

ராஸக்கிரீடை

வந்தது கார்காலம் அதன்
வரவால் தான் மலர்ந்து
தந்து மணமதனைத்
தான் பரப்ப மல்லிகையும்
இந்த விதமாகத் தான்
இருந்த இரவு கண்டு
விந்தை புரிந்து கண்ணன்
விளையாடத்தான் நினைந்து

கண்ணன் குழலுத கோபியர் குழலூசையில்
மயங்கிக் கண்ணனை நாடி வருதல்

அங்கையிற் குழலெடுத்துக் கண்ணன்
அழகாகப் பண் இசைக்க
எங்கெங்கோ இருந்தாலும் மனம்
ஈர்த்திடும் மாய இசையால்

பங்கயக் கண்ணன் தன்னைப்
 பார்த்திட ஆவல் கொண்டு
தங்கள் இல்லம் விட்டு கோபியர்
 தாம் வந்தனர் ஒளித்து!

புல்லாங்குழலிசை தான் செவி
 புகுந்த உடன் பரவசமாய்
வில்லினின்று விடுபட்டு
 விரைந்து செல்லும் அம்பெனவே
உள்ளங்கை கொண்டு பால்
 உவப்புடன் கறப்பதையும்
தள்ளி வைத்து விட்டுத்
 தாம் வந்தனர் கோபியரே!

பால், கஞ்சி காய்ச்சியவர் அப்
 பாத்திரத்தை இறக்காமலும், தம்
பதிக்கு உணவு படைப்பவர்கள்
 பாதியிலே விட்டுவிட்டும்
வேல்விழிக்கு மையிடுவோர் தம்
 விழிக்கு மையிட்ட படியும்
விளங்கும் சந்தனம், அணிபுனைவோர் அவ்
 வினை தொடர்ந்து செய்து கொண்டும்

எல்லோரும் எழுந்தோடி
 இருந்த நிலை செயல் மறந்து
பல்வகை அணி, மணியை இடம்
 பாராமல் மாற்றியணிந்து கொண்டு
உள்ளத்தில் உவகை பொங்க
 உலகத்தைத் தாம் மறந்து
கள்ளத்தன மாயன் மனம் கவர்
 கண்ணனை யடைந்தார் விரைந்து

தன்னை நாடி வந்த கோபியர் இல்லங்களிலே
அங்கு அவரில்லாதது தெரியா வண்ணம் கண்ணனே
எல்லாக் கோபியருமாகி அவர் கடமைகளைச் செய்தல்

கோகுலத்தில் அத்தனை
குலப்பெண்டிர் கன்னியர்கள்
கோபாலன் குழலோசை
கேட்டு இல்லம் விட்டுச் சென்றும்
கோகுலத்தில் உள்ள கோபர்
கோபியரைக் கண்டார் அங்கே
கோபாலன் தன் மாயையினால்
கோபியராய் விளங்கியதால்!

கண்ணன் குறும்பாகக் கோபியரை வரவேற்றுப் பின்
அவர்களைத் தம் இல்லங்களுக்குத்
திரும்பிச் செல்லத் தூண்டுதல்

வேகமாய்க் கோகுலத்தை
விடுத்து வந்த கோபியரை
வேணு கோபாலன்
வினயமுடனே நோக்கி
"மை போன்ற இவ்விருட்டில்
மங்கை நீர் வனம் வந்தீர்
செய்ய கோகுலத்தின்
சிற்றிடையீர் நலந்தானா?

பையப் பதுங்கிப் பாயும்
பல மிருகம் இங்குண்டு
மொய்வண்டு கருங்குழலீர்
முறையோ நீர் வந்ததிங்கு ? இவ்
வையகத்தின் மரபு
வார்குழல் வனிதையர் தம்
ஐயன், குழந்தை கட்கு
ஆவன செய்தல் அன்றோ?

செல்வீர் நீர் கோகுலம்
சிங்காரச் சிட்டனையீர்,'' எனப்
பொல்லாக் கண்ணன் தம் மனம்
புண்படுத்தும் சொற் கேட்டு
எல்லாக் கோபியரும் தம்
எழில் முகம் வாட்டமுற்றுச் ''சொல்
கல்லால் எமையடித்தாய்
கண்ணா நியாயமா'' என வருந்த

## கண்ணன் கோபியருக்கு உண்மையான பக்தியின் பாங்குரைத்தல்

''உண்மையான பக்தியை நீர் என்
உடனிருப்பதால் பெறுவதில்லை
நன்மை தரும் கண்ணன் என் சொல்வில்
நங்கையரே கேட்டிடுவீர்
ஆர்ப்பரிக்கும் கடலொத்த நும்
அகத்தினுள் காண்பீரென்னை
நேர்த்தி மிகு நேரிழையீர் இப்போது
நீர் செல்வீர் நும் இல்லம்'' என்றிட

## கோபியர் கண்ணனிடம் கூறியது

''சுந்தரரே எம் சொர்ணமே, எமக்கு
சந்திர சூரியரானவரே நீர் எம்
சொந்தமென உமைச் சந்திக்கவே நாங்கள்
சிந்தை செய்து ஈண்டு இங்கு வந்தோம். எம்முடைப்
பந்தமும் பாசமும் நீரே, புகல்
பாரினில் உம்பாதம் அன்றில்லை வேறே. எம்
பந்துக்களுக்குச் சேவை செய்வதற்கிணை —உம்
பாதசேவை என்றே எண்ணி வந்தோம்

விந்தை உலகினில் விதவித உறவென
விளங்கி இருப்பதும் வேணுகோபாலா, உன்
சிந்தையின் உத்தி இச்செகமெல்லாம் நீயே– எம்
சித்தத்தைப் பித்தாக்கி செயல் தடுத்ததும் நீயே
சந்ததமும் உன்னைச் சார்ந்திருக்கும் எம்மை
சஞ்சலப் படுத்துதல் ஏனோ ? எம்
சொந்த மென உன்னை எண்ணி வந்தோம் நீ
சொல்லுகின்றாய் நீதி, நியாயமென– எம்

சொந்த தருமத்தைச்
சொல்லிக் காட்டினாய் உன்
சொல் உண்மை, ஆனால் எம்
சொல்லையும் கேட்பீர்
வந்து எம்முடனிருந்து நீர்
வசந்தமெனக் குழலூதி
வஞ்சியர் எம் மனம் நிறைத்து எம்மை
வசமிழக்கச் செய்தது நீயே

இந்த நிலைமையில்
எம் மனம் இருக்கையில்
இனி இயல்பாய்க் கோகுலத்திற்குச்
செல்ல இயலுமோ?
பந்த மறுக்கும் உன்
பாதார விந்தத்தைப்
பாராது எம் மனம்
பதைக்குதே என் செய்வோம்?”

கோபியர் அன்பினில் கட்டுண்டு கண்ணன்

அவருடன் யமுனை நதி தீரத்தில் விளையாடல்

என்று சொல்லிய அக் கோபியர் தம்
இதய தாபத்தை அறிந்த கண்ணன்
கன்றை நினைந்து பால் சொரியும் பசுவென– மனக்
களிப்புடன் காரிகைகள் மனமது மகிழ

மங்கையர்கள் புடைசூழ வைஜயந்தி —நல்
        மாலையது மார்பினில் அணிந்த பிரான்
தன் கைக்குழலூதி தானும் பாடி அத்
        தையலர் மகிழும் வண்ணம் கூடி ஆடி

அவ் வனம் தன்னிலே
        விளையாடியதனால்
அவ்வனம் பொலிந்து
        எழிற் துலங்கிட வும்
ஆற்றுப் பொன் மணற்திடலை
        அவரடைந்து
ஆம்பல் மணம் தாங்கும் காற்றை
        நுகர்ந்து மகிழ்ந்தார்

கோபியர் கர்வமும் கண்ணன் அதை நீக்குதலும்

தம்மோடு களித்திருக்கும் இத்
        தங்க நிலா
தாமோதரன் தாம் பெற்ற
        பரிசெனவும்
பூவுலகில் பிறந்த பிற
        பூவையர் எவரும்
புரிந்திடாத புண்ணியம்
        நாம் பண்ணியதாலே

கார்மேகக் கண்ணனுடன்
        கூடிக் களித்தோம் —நாம்
காசினியில் உயர்ந்தோர் என
        கோபியர் எண்ணி
வார்குழல் வஞ்சியர் மனம்
        கர்வம் கொள்ள
வாமனன் முன், மண், விண் அளந்த
        மா மாயவன்

தான் தன்னுரு தன்னை
மறைத்து நின்றான்
தையலர் மன கருவத்தைக்
களைந்து அருள
ஆவினைப் பிரிந்து நின்ற
கன்று போலவும்
அழகு வேழம் பிரிந்த மடப்
பிடிகள் போலவும்

சோகமது மனதைத் தாக்க
சோர்த்த கோபியர்
வேகமாக வேணுகோபாலன்
லீலையைப் பாடி
மோகம் தலைக்கேறி பித்துக்
கொண்டவர் போல
ஆகாயமென விளங்கும் ஞானக்
கண்ணனை நினைந்து

கோபியர் வருந்திக் கண்ணனைத் தேடி அலைதல்

"கண்ணனைக் கண்டவர்
உண்டோ இங்கு?" எனத்தம்
கண் கண்ட மரம், புள்
மிருகமிடத்தும்
காரிகையர் வினவிய
வண்ணம் சென்றனர்
காடுகள், வனங்களில் தம்
மன்னனைத் தேடி

"திருமகிழ் மார்பன்
திருவே! துளசி!
திருமால் உகந்தேற்ற
கல்யாணியே! நாங்கள்

கருநிறக் கண்ணனுடன்
களித்திருந்தோம். அவன்
காணாமற் போய்விட்டான்
கண்டாயோ நீ?

வண்டாடும் உன்னை
நல் மாலையாக்கி
வைத்துக் கொண்டான் உன்னைத்
தன் மார்பில் சூட்டி, எமைக்
கொண்டல் வண்ணன் குழலூதி
மயக்கிப் பின்
கூறாமல் மறைந்து விட்டான்"
என்று புலம்பியே

மங்கையர் தம் வேட்டையினைத்
தொடர்ந்தார் அங்கு
மலர்ந்து மணம் பரப்பி நிற்கும்
மலர்களைப் பார்த்து
"மாலதி, மல்லி, பிச்சி
ஜாதி மலர்களே! அந்த
மாயக் கண்ணன் உமைத் தொட்டு
சென்றானோ இவ்வழி?"

கோபியர் கண்ணன் அடிச் சுவடு கண்டு
அதைப் பின்பற்றிச் செல்லல்

என்றே தம் இதயத்தின்
ஏக்கத்தைக் கொட்டி
எதிர்ப்பட்ட செடி, கொடி என
யாவையும் பார்த்துச்
சென்ற போது பரந்தாமன்
சேவடித் தடம் கண்டு
செல்வமதைக் கண்டு மனம்
துள்ளுதற் போல

## கோபியர் பிறிதொரு அடிச் சுவடு கண்டு வருந்துதல்

அந்த அடி செல்லுமிடம்
தாம் அடி பற்றி
அணங்குகளும் வியந்து
அவ்வழியினிற் செல்ல
இந்த அடிச் சுவட்டோடு இளம்
மங்கை சுவடொன்று
இணைந்திருப்பது கண்டு மனம்
இடிந்து தாம் வாட

களிறுடனே சேர்ந்து செல்லும்
பிடியெனக் கண்ணன்
கட்டழகன் தோள் பற்றிக்
சென்றவள் யாரோ?
காளையவன் நமை விட்டு அக்
கன்னியுடன் செல்லக் –அக்
கன்னியவள் செய்தவத்தின்
புண்ணியம் மலையே!

## கண்ணனுடன் சென்ற அணங்கின் மமதையும் கண்ணன் அதை அழித்தலும்

என்று அவர் எண்ணி மனம்
ஏங்கிடும் காலை
என்னை நாடிக் கண்ணன் வந்தான்
இது என் சிறப்பு
என்று மனம் எண்ணி அந்த
ஏந்திழை மகிழ்ந்து
"இனி ஓர் அடி எடுத்து வைக்க
இயலாது என்னால்

எங்கு என்னைக் கூட்டிச் செல்ல
எண்ணி யுள்ளீரோ
அங்கு எனைச் சுமந்து செல்வீர்''எனும்
அவளுரை கேட்டு
மங்கை மனதின் கருவம் தன்னை
மாற்றி உணர்த்திட
மாலவன் அவளைத் தன் தோளில் ஏறென
மறுமொழி பகர்ந்துவிட்டு

பங்கயக் கண்ணன் மாயமாய் நங்கையின்
பார்வை விட்டு மறைய
எங்கும் அவனைக் காணா ஏந்திழை தன்
இறுமாப்பழிந்து கலங்கி
''தோள்வலி மிகுந்த தோளனே மீண்டும்
தோன்றுவாய் என்முன்னே –என்
பாழ்மனதின் மமதை யழிந்தது
பாவையென் மனம் தெளிந்தது'' என்றாள்

*கண்ணனைப் பிரிந்து புலம்பி நின்ற காரிகையை*
*கோபியர் காணுதல்*

''நீள்வழி என்னை நடத்தி வந்த என்
நித்திலனே நாதா –உன்
காலிணையை நான் கருதுகின்றேன்– உம்மைக்
காட்டியருளுமென்று'' தன்
நீள்விழியதனை நிலம்பதித்து நெஞ்சுருகி
நிற்பவளைக் நோக்கி
''வாழி ! இவள் இங்குள்ளாள்'' என
வந்து சேர்ந்தனர் கோபியரே!

கண்ணனை அங்கு காணாது கோபியர் வினவுதல்

பார்த்தனர் அப்பாவையின் பக்கமெங்கும் தம்
பார்வை எட்டும் வரை
கோபாலன் பாத படிமத்தை அருகே
பாராத கோபியர்கள்!
"கூர்த்த மதியுடைய கோபாலன் உனைவிட்டுக்
கூறாமல் சென்ற தெங்கே
கூறிடுவாய் எழில் நேரிழையாய்" எனக்
கோபியர் கேட்டிடவும்,

அந்தப் பாவை பதிலுரைத்தல்

மண்ணளந்த அந்த மாயவன் தன்னை
மதித்ததாய் தான் நினைத்துத் தன்
மதியிழந்து தன்னைத் தூக்கிச் சுமக்க
மணிவண்ணனைத் தான் பணித்ததையும்
கண்ணன் தன் தோள் ஏற அக்
காரிகையிடம் சொல்லி அவள்
கண்முடித் திறக்குமுன்னே
கள்ளத்தன மாயன்

விண்ணவரும் தொழும் வேதமுதல்வன்
விந்தையாய்த்தான் மறைந்தான் என
வண்ண எழில் மங்கை வஞ்சி வாய்சொற் கேட்டு
வருந்தி வியந்த வண்ணம் கோபியரெல்லாம்

அனைவரும் கூடி கண்ணனை வனம் முழுவதும்
தேடியலைதல்

முன்னம் கண்டவனை
மூவா முகுந்தனைக்
கண்ணனைக் கார் எழில்
கற்பகச் செந்திருவை

எண்ணி அவர் இருந்து பிற
எண்ணம் ஏது மற்று
வண்ணக் குழல் மாதர்
வனம் முழுவதும் தேடுகையில்

## வனத்தில் இருள் சூழ்தல் கோபியர் நிலை

கதிரோன் பணி முடிக்க
கமலம் இதழ் மூட
மதி தன் முகம் காட்ட
மலர்ந்தன ஆம்பலுமே
எதிலும் பற்றற்றுத் தம்
இல்லம் தனை மறந்து
கதி நீ கண்ணா என்றே
கருதி மனம் ஒன்றி

மால்வண்ணன் புகழதுவைத் தம்
மனமாரப் பேசிடுவார் தம்
காலிணை கொண்டு கண்ணன்
காட்டிய நடம் புரிவார்
ஆலிலைத் துயின்றிவனின்
அற்புதம் தனை வியந்து
நூலிழைச் சிற்றிடையார்
நூதனின் நினைவிலாழ்ந்து முன்பு தாம்

ஆடிய மணற் திட்டு
அதனையே வந்தடைந்து
அச்சுதன் வருவானிங்கு என
ஆவலாய்க் காத்திருக்க
பாடிடுவார் கூடி நந்த
பாலனின் புகழ் மலையை —அவன்
பாலனாய்க் கோகுலத்தில் வந்து
பிறந்ததாலது சிறந்ததென்றே

## கண்ணனை விளித்துக் கோபியர் உருகிப் புலம்புதல்

"மாலே! உன் மார்புறையும்
மங்கையாம் இலக்குமியும்
கோலமாய் எம்முடனே இக்
கோகுலத்தில் வாழுகின்றாள்
நீலமேகக் கண்ணா எம்மை
நினக்கே யாம் அர்ப்பணித்தோம்
வாளாயினியும் இருக்காமல்
வந்திடுவாய் எம்முன்" எனவும்

"இல்லை உமக்கு விலை
இனியவரே என்றென்றும்
இன்பம் அளிப்பவரே
எம் மனதில் இருப்பவரே
இல்லை என்னாது வரம்
இரங்கி அளிப்பவரே
இவ்வழகிய வனந்தன்னில்
இருக்கின்ற குளத்தினிலே

மலர்ந்துள்ள எழில்மலர்கள்
மத்தியிலே கண்ணா
சலனமே யாம் கொண்டு
சங்கடப் படவிடுதல் எம்மோடு
பழகிய உமக்கழகோ?
பாவமிது இ(ல்)லையோ
நிலவுதான் எரியுதப்பா
நீயில்லா வனந்தன்னிலே

உள்ளத்தில் ஆசனமிட்டு
உடலெடுத்த அனைவருள்ளும்
உறைபவனே, நீ யசோதை
ஒருத்தியின் புதல்வனன்று – பால்

வெள்ளத்தில் துயின்றிருக்கும்
வித்தகனே! நான்முகனின்
வேண்டுதலுக் கிசைந்து எம்குல
விழுதாக உதித்தாய் நீ

எள்ளத்தனையும் குறையா உம்
இன்மனதால் வரம் தன்னை
அள்ளிக் கொடுப்பவரே
அபயமளித்துக் காப்பவரே
மெல்ல உன்தாள் வருடும்
மென் கரத்தாள் தனை மேவும் —உம்
செல்லத் திருக்கையை எம்
சென்னி மேல் வைத்தருள்வீர்

என்று பல சொல்லி எழிலான கோபியர்
கண்ணன் திருப்புகழ் பாடி கழலிணை அருள்
வேண்டுதல்

உந்தன் அழகால் உத்தமி திருமகள்
உறைகின்றாள் உன் மார்பினிலே
உந்தன் கருணையால் உனைச் சரணடைந்தவர்
உற்ற பாவம் நீக்கு கின்றாய்

உந்தன் பார்வையால் கோபியர் நாங்கள்
உவந்து பெற்றோம் புண்ணியப் பிறவி
உந்தன் உறவால் உள் மனம் நோக்கி யாம்
உய்ந்திட அருள்வாய் உலகளந்தோனே

கண்ணனின் பாத மகிமை

உன்திரு அருளால்
உலகிற்குப்பால்
உவந்தளிக்கும்
பசுபின் திரிகின்றாய்

உன்னுடை வீரத்தால்
காளியன் கருவத்தை
ஒடுக்கி அவன் தலைமேல்
ஒயில் நடம் புரிந்தாய்

பொல்லாத் துயரால்
புழுங்குவோர் மனமது
புத்துணர்ச்சி பெற்றுப்
பொலிந்திடவும்
எல்லா மறிந்த
ஞானியர் பலரால்
என்றும் போற்றப்
பெற்றது மான

அத்தகைய உம்
அழகிய பாதத்தை
ஆதரவாய்க் கோபியர்
எம்மேல் வைப்பீர்
சுத்தமாய் இதயம்
துலங்கிடவே எம்
சுழல் ஆசைகளனைத்தும்
விலகிடவே

கண்ணன் தம்முடன் இருந்த போது நிகழ்ந்த வற்றைத் தம்மால் வெளிப்படுத்திக் கூற இயலாத போது அதனை விரிவாக உரைக்கக் கூடியவர்கள் பேறு பெற்றவர் எனக் கோபியர் போற்றுதல்

அன்பால் கோபியர் எம்மை
அணைத்தீர் —பின்
அகன்றீர் எம்மைத் தவிக்க
விட்டு விட்டு

எம்மிடம் நீர் சொன்ன இரகசிய
வார்த்தைகள்
இனிய பார்வை உம்
விளையாட்டிவற்றை

சொல்லக் கேட்ட மாத்திரத்தில் மன
சுத்தத்தைச் சாந்தியை அளிப்பதுவும்
எல்லா மங்கள நிறைவும் அருளும்
இனிய கண்ணா உன்னைத் தம்

சொல்லால் அறிந்து
சுவைபட விரிவாய்ச்
சொல்லுபவர் பெரும்
பேறு பெற்றார்
எல்லாம் வல்ல
இனியவனே ஓர்
இணையில்லானே
அருளாளா'' என்றார்

கண்ணன் புகழில் திளைத்திருந்த கோபியர்
கண்ணனைக் காணா தம் நிலையால் நொந்து
கண்ணனை நினைந்து புலம்புதல்

''ஆவினம் ஓட்டி நீ
கோகுலம் விட்டகன்றால்
அலையுதப்பா எம்
ஆழ் மனமும்
தாவிச் செல்லும் உம்
தாமரைப் பாதத்தைத்
தாக்குமே கல், புல்
முள்ளுமென்று

அந்தியது வந்து விட்டால் எம்
ஆனந்தம் பெருகிடவே, ஆ
முந்தி வர, முகுந்தா உன் சுருள்
மோகன கேசமதில் – புழுதி
வந்து தான் படிந்திருக்க உன்
வண்ணத் தாமரை முகத்தை
வந்து நீ காட்டிடுவாய் முழு
வட்ட நிலா எனப் பொலிந்து!

கதிர் உதிக்கும் வேளையிலே
கண்ணா நீ கன்றோட்டி
கானகமே சென்றால் மீண்டும்
காணும் வரை யுகமாய்த் தோன்றும்
அயன்படைத்தான் இருவிழிகள்
ஆனால் இமை படைத்துக் கெடுத்தான்
அந்த இமைகள் மூடிட மறையுமே உன்
அழகிய வதனம் என்றுளம் வாடும் யாம்

அன்பால் உம் அடிமலர்
தாங்கினோம் எம் நெஞ்சில்
அவ்வடியால் இவ் வனத்தில்
அலைகின்றீர் எமைவிட்டு!
உம்பால் எம் உணர்வும்
உயிரும் ஒன்றியதால்
உம்பாதம் கற்களால் நோக்குமென
உளம் கசிந்தோம் கார்வண்ணா

குழலிசையால் ஈர்க்கப்பட்டு எம்
குடும்பம் மக்கள் கணவரை விட்டு
அழகிய கண்ணா உனை நாடி யாம்
அடைந்தோம் எம்புற மனமதை மூடி

நம்பி உன்னை யாமடைந்தோம் –கோப
நங்கையர் எம் சுயநிலை மறந்து
செம்பொருளே ! சுபம் யாமடைந்து இன்று
சோகத்தால் மனம் நிலை கலங்குகின்றோம்.”

தம் இதயத்தைக் கொட்டிப் பேசியும் கண்ணனைக்
காணாத கோபியர் கூவி அழ ஆரம்பித்தல்

என்றிவ்வாறாகக் கோபியர்
தம் மனதின்
இயல்பை, இயலாமை
யாவற்றையும் அன்று
குன்றைக் குடையாக்கி
கோவிந்த நாமம் கொண்ட
கோபாலன் தனைக் கூவிப் பெருங்
குரலெடுத்து அழத்துவங்க

கண்ணன் கோபியருக்குக் காட்சி யளித்தலும்
அவ்வமயம் அவர் நிலையும்

மஞ்சட் பட்டாடை உடுத்து
மாதவன் மாமாயன்
மாலைகள் மயிற்பீலி தரித்து
மன்மதனுக்கும் மன்மதனாய்
மங்கையர்தம் மனம் குளிரத் –தன்
மதிவதனம் அவர்காண
மாலவன் வந்திடவே
மாண்டவர் மீண்டெழுந்தாற்போல்

கண்கள் தமைக் கசக்கி
கனவோ என்னுடற் கிள்ளி
கனவல்ல நிசமெனக் கோபியர்
கண்டதனால் கண்ணனைக்

களிப்பு மிகக் கொண்டு
கமலமெனத் திகழும் கண்ணன்
கரமலர் தனைப் பற்றிக்
காரிகையர் மகிழ்ந்தனரே!

ஒளித்துப் போனவன்
ஓடிமுன் வந்ததால்
ஓய்ந்த உடல் மனம்
உறக்கம் தெளிந்திடக்
களித்து மனம் மெய்
கண்களும் மின்னிடக்
கண்ட பெரு நிதியாய்க்
கண்ணனைச் சூழ்ந்துமே

கோபியர் தம் மேலாடையைக் கண்ணனுக்கு
ஆசனமாய் அளித்து அவனைச் சூழ்ந்து அமர்தல்

கோபியர் யாவரும்
கோலாகலமாய்த் தம்
கொங்கை குங்குமம்
படிந்த மேலாடையைத் தம்
ஆவியுட் புகுந்து
அமுதமாய்த் தித்திக்கும்
அற்புதக் கண்ணனுக்கு
அளித்தார் ஆசனமாய்

யோகியர் உள்மனம்
தன்னில் உறைந்திருக்கும்
உத்தமன், உன்னத
கோபியர் நடுவே
காவிய நாயகனென
வீற்றிருக்க, அக்
கண்ணனைச்சுற்றி
அமர்ந்த காரிகையர்

## கோபியர்களின் ஐயமும் கண்ணனின் விளக்கமும்

"பொன்னடி தன்னைப்
பூசித்திருப்பார். சிலர்
புகழடிக்குத் தொண்டு
புரிகின்றார் சிலர் – உன்
பொன்னடி தன்னைப்
பூசியார் தம்
பொல்லா அடிக்கும் தொண்டு
புரிகின்றார் சிலர்

புகழடி பொல்லா அடி
இரு பாலரையும்
போற்றித் தொண்டு
செய்வாரிலர் சிலர் – உன்
புகழ் சேவடியைப்
புகலாயடைந்தோம் –பொருள்
புரியும்படி எமக்கு
விளக்கிட வேண்டுமென்றார்."

மாந்தரின் நிலை பற்றி
மங்கையர் தெளிவு பெற
மாண்புடைக் கண்ணன்
மால் எழில் வண்ணன்
தெள்ளத் தெளிவாய் அவர்
தெளிந்து உணர்ந்திட
வள்ளல் வாய் நேர்ந்தான்
வஞ்சியர்க்கு வாய்ம்மையினை

## கண்ணன் பலதரப்பட்ட மனிதர் இயல்பு பற்றி விளக்கிக் கூறுதல்

"ஒருவர்க் கொருவர்
உபகாரம் செய்வது
உள்மனம் உறையும்
அன்பினாலன்று
பருவத்தே கவனமாய்ப்
பயிர் செய்தால் திண்ணமாய்ப்
பலன் கைமேலே
கிடைப்பது போலவர்

தன் காரிய மதனை
தான் நடத்திக் கொள்ள
அடுத்தவர்க்குதவி
அடித்தளம் அமைக்கின்றார்
உண்மையில் அவ்வித
உபகாரம் செய்வது
உன்னத நட்போ
தர்மமோ அன்று

தனக்குத் தொண்டு
செய்யாதாருக்கும்
தக்க விதமாய்
உதவும் பாங்கே
தந்தை தாய் மன
தனிக்கருணை —அது
தருமமும், நட்பும்
சேர்ந்த உயர்நிலை

தம்மைச் சேவிப்பார் தம்மையும்
தான் சேவித்தறியாதவர் பிறர்
தன்னை எங்ஙனம் சேவிக்கக்கூடும்?
தையலீர் அவர்மன பலமது அற்றோர்

ஆத்மா அதனில் அமிழ்ந்து ஒன்றி
அகிலத்தில் விருப்பு வெறுப்பினை அற்றோர்
ஆசையைத் தூண்டும் பொருட்களைக் கண்டும்
அகத்தின் ஆவலை வென்று உய்ந்தவர்

அந்நிலை அடையா மூடர் பிறரை
அன்புடன் சேவிக்கத் தவறுவதுண்டு
தன் நிலை யறியாக் கீழோர் தாமோ
தமக்குதவியவரைத் தாக்குவதுண்"டு என்றான்.

கோபியர் தன்னை நன்றி மறந்தவன் என நினைப்பதை
மறுத்துக் கண்ணன் விளக்கிக் கூறுதல்

"நுண்ணிடையீர் கோபியரே
நூதனமே உம் மனதின்
எண்ணங்கள்! உம் அன்பை
ஏற்காமல் விட்டொழித்து
நன்றி மறந்தான் இந்த
நந்தகோபாலன் என்றிருந்தீர்
நான் புகலும் உண்மையினை
நன்றாகக் கேட்டிடுவீர்"

என்று மேலும் சொல்வான் அவரிடம்
இனியவனான கண்ணன் தொடர்ந்து
பின்னாளில் கீதை உரைக்கப் போகின்றவன்
இந் நாளில் கோதையர்க்கு நன்னெறிதனையே

"வறியவன் ஒருவன் பெற்ற
வளர்நிதி தான் மறைய
அரிய தன் பொருள் இழந்த
அவ்வறியவன் தன் மனம் பிற

நெறியதை நினையாமல்
நினைக்கும் இழந்த பொருள் எனவே
பிரியமாய் எனை நினைப்பார் மனம்
பிறழாது எனை நினைக்க

ஒதுங்கி நான் ஒளிந்து அவர்
உள்மனம் தனை நிறைப்பேன்
வதங்கி மனம் நீர் வாடி
வாராயோ என்றெனைத் தேடி– விழி
பிதுங்கிட எனை நினைத்து –உம்
பிள்ளை சுற்றம் மறந்து மயங்க –உம்
மதி மறைத்து உம்முள் இருந்தேன்
மங்கையீர் என்பிழை ஏதென்றான்?

என்னை நீங்கள் நினைக்க வேண்டியே
என்னுருவம் நான் மறைத்திருந்தேன்
இதுவும் உம்பால் தோன்றிய பிரியத்தால்
இதைத் தீதென்று நீர் தீர்ப்பளிக்கலாமா?

கண்ணன் கோபியரிடம் தான் பட்டுள்ள
நன்றிக் கடன் பற்றிக் கூறுதல்

அன்பினால் இணைந்த நும்
அரிய இல்லறத்தை உம்
ஆத்ம நாட்டத்தால் அறுத்து
அதனை விட்டு, கண்ணன்
என்பால் பக்தி கொண்டீர்
இதற்கு இணையாக
இனிய அமரர் தம்
ஆயுட் காலம் முழுவதும்

இருந்து பதிலுபகாரம்
        எத்தனை நான் செய்தாலும்
இன்னும் காலம் போதாது
        ஏற்றமுடைய உம் அன்பால்
என்னைக் கட்டிப் போட்டீர்
        ஏந்திழையீர் உண்மை இது
இதிலிருந்து யான் மீள
        எனக்குதவுவது உம் நற்குணமே"

*கண்ணன் கோபியருக்கு விளக்கம் கூறிய*
*பின் அவருடன் கூடி விளையாடிக் களித்தல்*

என்று கண்ணன் கனிவாய்ச் சொல்லிட
        எளிய இனிய கோபியரெல்லாம்
இணைந்து தம் கரம் கோர்த்துச் சூழ்ந்திட
        இளம் கதிரனைய எழில் மன்னன் விளையாடிட

மங்கையர் இருவர் மத்தியில் கண்ணன்
மந்தகாசமாய் அவர் கழுத்தை அணைத்து
மாதவன் தம்முடன் இருப்பதாய் அந்த
மங்கையர் நினைந்திடச் செய்த யோகீஸ்வரன்

ஆடியிற் காணும் பிம்பத்தைக் குழந்தை
அணைத்துத் தொட்டுப் பார்த்து ரசித்து
வேடிக்கையாய் விளையாடுமாப் போல
வேணு கோபாலன் கம்பீரமாக

அச்சுதன் ஆத்ம ராமனே ஆயினும்
அச்சிறு ஆய்ச்சியர் அன்பின் புனிதத்தால்
அத்தனை ஆய்ச்சியருக்கும் பல கண்ணனாய்
அவனாகி அவர்களோடு விளையாடி மகிழ்வாய்

கண்ணன் கோபியருடன் ஆடிய ராச லீலையை விண்ணில் தேவர்கள் கூடித் தம் பத்தினியருடன் கண்டது

ஆடினான் ஆனந்தமாகக் கோபியர்
அனைவருடனும் அவர் அகமது மகிழ!
பாடிப் பரவசமாகிய அவர்களைப்
பார்த்தனர் தேவர்கள் தம் பத்தினியருடனே!

நீள் விசும்பதனை நிறைத்து அவர் நின்று
நித்திலன் தேவகி மைந்தன் கோபாலன்
கோபியராம் பொன் மணிகளிடையே
குறையிலா மரகதமெனத் திகழக் கண்டார்

கண்ணன் கோபியருடன் வனத்தில் உலவியது

நீரிலும் நிலத்திலும் மலர்ந்த மலர் மணம்
நேயமாய்க் காற்றால் பரவ வண்டினமோடு
கார்முகில் வண்ணன் வஞ்சியர் கூட்டம்
களிறொடு பிடியென கானகம் உலவிட

கோபியருடன் கண்ணன் ஆடிய லீலையின் தத்துவம்

அன்பே தெய்வம் அதுவும் அவனே
அனைவரின் அணுவுள் அமைவதும் அவனே
இயங்கும் பல வடிவெடுப்பதும் அவனே
இல்லை அவன் இல்லாத உயிர் உடல் நிலையே

காரணன் காரியம் காலமும் அவனே
பூரணன் புரிந்திடும் செயல் நிலை அவனே
நாரணன் நல்லதை நடத்திடும் நாயகன்
வாரணம் போல் வலிவானவன் லீலையால்

வண்ண வண்ண வஞ்சியருடனே
வஞ்சனையில்லா அவர் அன்பாலே
கண்ணன் அவருடன் களித்தே இருந்தான்
களங்கமிதில் காணக் காரணமில்லை.

கண்ணன் பிருந்தாவனத்தில் இரவில்
கன்னியர் வஞ்சியருடன் களித்திருந்தான்
எண்ணி ஈரைந்து ஆண்டு பாலகனால்
இடைச்சியரடைந்த இன்பத்திற் கிணையில்லை!

## கண்ணனின் மாயாஜாலம் கோகுலத்தில்

### கோபர்கள் நிலை

ஆயரோடு ஆவினம் ஆய்ச்சியர் அனைவரின்
ஆத்மனாம் கிருஷ்ணன் ஆய்க்குடி தன்னில்
மாயமே செய்ததால் ஆயர்கள் தத்தம்
மனைவியர் அருகினில் இருந்தனர் பார்த்திட!

மாயமே செய்ததால் மங்கையர் தம் மனை
மறந்ததும் மகிழ்வுடன் வனத்தினில் களித்ததும்
ஆயர்கள் ஏதும் அறிந்திடார் ஆதலின்
அவருக்கில்லை அழுக்காறு கண்ணன் மேல்

### இரவில் தன்னுடன் ஆடிப் பாடிய கோபியரை கண்ணன் விடியுமுன் அவர் இல்லங்களுக்கு அனுப்புதல்

கதிர்முகம் கண்டிடக் கமலமும் ஆவலாய்க்
காத்திருக்கும் இளம் காலை புலருமுன்– மால்
அதிவிரைவாகவே அணங்குகள் அனைவரும்
அவரவர் இல்லம் அடைந்திட அருளினான்.

ஆடிப் பாடிக் கூடி
இரவினை
ஆய்ச்சியர் கழித்தும்
அலுப்பற் றிருக்க –எனைத்
தேடியே வந்த நீவிர் திரும்பி
மனை செல்க என
தேவகி மைந்தன் சொல்லத் திரும்பினர்
மனமின்றியே இல்லம்

## பிருந்தாவன லீலை காளை யுருவில் கண்ணனைக் கொல்ல வந்த அரிஷ்டாசுர வதம்

ஆனந்தமாய்க் கோகுலத்தில்
ஆய்ச்சியர் வெண்ணையுண்டு
ஆவினம் மேய்த்த வண்ணம்
அமுதமெனக் குழலிசைத்து
அன்புடைக் கோபியருடன்
அழகு மால் இருக்க ஓர்நாள்
அரிஷ்டன் எனும் அசுரனவன்
அச்சுதனைக் கொல்ல எண்ணி

கொழுத்த திமிலுடன்
கூரிய கொம்புகளும்
பருந்த உரு காளையெனப்
பூமியைப் பிளந்து கொண்டு
சிறுத்த இடை நல்லார்
சேயிழையாரோடாயர்
வருத்த முற்று அஞ்ச
வந்து புகுந்தான் கோகுலமே

அஞ்சி நடுங்கி ஆயர்
அனைவரும் கோவிந்தனையே
தஞ்ச மென்றிருக்கும்
தன்மையால் தான் விளிக்க
வஞ்சகன் அசுரக் காளை
வடிவினன் கொம்பைக் கண்ணன்
பஞ்சன்ன தன் விரல் பத்தால்
பற்றிப் பூமி தனிற் தள்ளி

கொஞ்சமும் யோசியாமல் இரு
கொம்பினையும் பிடுங்கி
மிஞ்சிடாது ஈரம் போக
முறுக்கிப் பிழிந்த துணி போல
பஞ்சமா பாதகம் செய்யப்
பார்வந்த அரிஷ்டாசுரனை
மஞ்சுலாவும் மேக வண்ணன்
மணி வண்ணன் தான் கொன்றான்.

## கோபர்கள், பலராமன் வாழ்த்த கிருஷ்ணன் அவர்களுடன் இருத்தல்

அரிஷ்டாசுர வதம் கண்ட
ஆயர்கள் கிருஷ்ணனின்
அரிதான செயலினால்
பாசம் மிகுந்தவராய்
ஆயர்களோடு பலராமனும்
வந்து வாழ்த்த
அச்சுதன் ஆயர் குலக்
கொழுந்தாக இருந்தானங்கே!

---

# மதுரா லீலை

## நாரதர் மூலம் அரிஷ்டாசுர வதம் பற்றி அறிந்த கம்சனின் செயல்கள்

அரிஷ்டாசுரன் மாண்டதை
அறிந்த நாரதர், தன்
அத்தனைச்சிறையிட்டு
அரசனான மூர்க்கனாம்
வஞ்சனையே நெஞ்சமாகி
வாழும் கம்சனிடம்
வந்து விரிவாக
வார்த்தை சொல்லலானார்

"உரிமையாய் அரசை
நீ பறித்தாய் அன்று –உன்
உயிர் பறிக்க நந்த
கோகுலந்தன்னிலே இன்று
பரிவுடை வசுதேவர் ரோகிணி
தேவகி மைந்தர்
பலராமன், கண்ணன்
வளருகின்றார் கம்சா கேள்

உன்னாற் கொல்லப்படுவரென
ஒளித்து வசுதேவர் அஞ்சி
தன்னால் தம் ஆத்ம நண்பராம்
தக்கோர் நந்த கோபர் வசம்
கண்ணனோடு பலராமனையும்
கச்சிதமாய் வளர விட்ட
காரணமிதுதான் கண்ணனால் உன்
காளை அசுரன் மாண்டான்"

என்று நாரதர் கூறிடக் கேட்டு
இரும்பு மனக் கம்சன்
குன்றென இருக்கும் மனமொடு உடலும்
கோபத்தாற் துடிக்க செய்வது
ஒன்றையு மறியாது உள்மனம் உழன்று
கொந்தளிக்கச் சினந்து
கொன்றுவிட வசுதேவரை விரைவில்
குறித்தான் தன் தீய மனதினிலே

## கம்சன் மதியிழந்து வசுதேவர் - தேவகிக்கு விலங்கிடல்

கையில் எடுத்தான் கத்தி –வசுதேவரைக்
கடிதில் கொல்ல வென்று – அதனைக்
கண்ட நாரதர் கண்டித்திட அவன்
கனன்றெழும் சினத் தீயால்
கண்ணனுடன் பலராமனால் தானே
கண்டம் எனக்கென்று மனம்
கருதி கம்சன் வசுதேவர் தேவகியைக்
கடும் சிறையிட்டு விலங்குமிட்டான்

நாரதர் சென்ற பின் கம்சன் தன் மந்திரி,

மல்லர்களை அழைத்துக் கூறியது,

நாராயணா எனும் திரு நாமத்தைச் சொல்லி
நாரதர் சென்ற பின்னே அந்த
நஞ்சிலும் கொடிய மனமுடைக் கம்சன்
நவின்றான் கேசியிடம் இனி

"உன்னால் பலராமனும் கண்ணனுமிவ்
உலகில் மடிய வேண்டும். நீ
உன்னாலான உத்திகளைச் செய்து
உடனே கொன்றிடென்று"

இவ்வாறு கூறிக் கேசியை அனுப்பிய
இரக்கமில்லாக் கம்சன் தன்னைக்
கொன்றிடக் கண்ணன் பலராமனிருக்கக்
கூடாதென்றெண்ணி விரைவாய்

முரடனாம் சலன், சாணூரன், தோசலகன்
முஷ்டிகன், மந்திரிகன் என்றே
தரமில்லாரைக் கூட்டி அவரிடத்தில்
தான் அதிகாரமாகக் கிருஷ்ணன்

தன்னோடு அண்ணன் பலராமன் இவர்
தன்னால் என்னுடை மரணம் பின்பு
தான் நிகழும் என அசரீரி வாக்கொன்று
தானுரைத்தது பண்டொரு நாளில்

இந்நாள்வரை அவர்
இருப்பிடம் அறிந்திலேன்
இன்றவர் கோகுலத்தில்
இருப்பதைஅறிந்து இங்கு
கொண்டு வர ஏற்பாடுகள்
நான் செய்வேன் –பின் நீர்
கொன்றிடுவீர் மல்யுத்தத்திலே
கூர்முஷ்டிகா சாணூரா

முறைப்படி சதுர்தசி
திதியினில் தனூர் யாகம்
முதலில் நீர் முன்னின்று
தொடங்கி நடத்திடுக
குறையின்றி வர மருள்
உருத்திரருக்குக்
கொடுத்திடுக
பலிப் பொருட்களைப் பின்

மல்லர்களே நீர்
மல்யுத்தம் செய்து என்
மரணமதனைத்
தடுத்திடுவீர் —உம்
மல்யுத்தத்தை இந்த
மண்டல முள்ளோர்
மனமுவந்து கண்டு
களிக்கட்டும்" மென்று

அர்த்த சாத்திரம்
அறிந்தவனான
அதமனாம் கம்சனும்
தன்னுடைய
அரக்க மனமதில்
தோன்றுமனைத்தும் தன்
அசுரப் படைக்குக்
கூறியபின்

நந்த கோகுலத்தில்
நலமுடன் வளரும்
நாயகராம் இரு
பாலகரையும் தன்
நாட்டிற்கு அழைத்து
வருவதற்கான
நடவடிக்கைகளை
எடுத்தான் கம்சன்

*கம்சன் அக்ரூரரை அழைத்துக் கூறியது*

அன்பும் பண்பும் அறிவும் நிறைந்த
அமைச்சர் அக்ரூரரை வரவழைத்து
அவரிருகரங்களைத் தான் பற்றி —மனம்
அஞ்சாமல் கம்சன் நஞ்செனக் சொல்வான்

"போஜரோடு விருஷ்ணிகளையும் நன்கு
போற்றி நலம் புரியும் அக்ரூரரே
போஜகுலத் தோன்றல் எனக்கு நீர்
புரிந்திட வேண்டும் ஓர் உதவி

சிந்தனை பிறிதின்றிக் கோகுலம் நோக்கிச்
சீக்கிரம் செல்வீர் ரதத்தில் —நந்தர்
மைந்தராம் பலராமன் கண்ணனை
மதுராவிற்கு அழைத்து வருவீர்

அன்றே எனது மரணம் பற்றி
அசரீரி வாக்குச் சொல்லியது
அவரால் எனக்கு மரணமுண்டாகாமல்
ஆவன யாவும் நான் செய்தல் வேண்டும்

நன்றாய்ப் பலப்பல காணிக்கை எடுத்து
நந்தகோகுலம் சென்று நீர்
நந்தர் குமாரர்கள், யாதவரையும் நம்
நாட்டிற்குக் கூட்டி வருவீர் என்

மாமனாய் குருவுமான ஜராசந்தனோடு
மற்றும் என் தோழராயிருக்கும் இப்
பாணன், நரகன், சம்பரன், த்விலதன் எனப்
பாசமிகு நண்பர்கள் உதவியால்

தேவர்களை ஆதரிப்பவர் தமையெல்லாம் கொன்று
தீர்த்தபின் இப்புவி தனை நான் ஆள
ஆவல் கொண்டே உம்மை அனுப்புகிறேன் —என்
ஆணைப்படி நீர் கோகுலம் சென்று

யாதவரைத் தனூர் யாகத்தைக் கண்டிட
யதுக்களின் தலைநகராய் விளங்கும் என்
பூமதுரை எழிற்பொலிவினைப் பார்த்துப்
புளகமுற்று அவர் களித்திடும் வண்ணம்

கோகுலத்தில் நந்த கோபருடைய
குலக்கொழுந்தாய் விளங்கும் இளம்
பாலகராம் பலராமன், கோபாலனைப்
பரிவுடன் அழைத்து வருவீர்'' என்றான்.

அக்ரூரர் கம்சனிடம் கூறியது

"மதியால் மரணத்தை வெல்லும் உம் முயற்சி
மன்னவனே மிக நன்று ஆனால்
விதியால் கை கூடும் விளைவை மன
விருப்பு வெறுப்பின்றி ஏற்றுக் கொள்ளும்

நிதியாய் மனைத நிறுத்துவது நலம்
நிலத்தில் இங்ஙனம் நிகழ்திடக் கூடுமோ
சதியால் சரிந்திடும் மனக்கோட்டை'' எனும்
சரித்திரம் கண்ட உண்மையினை

அக்ருரர் தம் அகத்தின் கருத்தினை
அரசராயிருக்கும் கம்சனிடம் வெகு
அழகாய்க் கூறி அதன் பின்னே எது
ஆயினும் அரசன் ஆணையென்றேற்று

"கம்சனே உம்முடைக் கட்டளைப் படி நான்
கடுகிச் செல்வேன் கோகுலம் – இறை
அம்சமாய் விளங்கும் அவர் மைந்தரோடு நந்தரையும்
அழைத்து வருவேன் மதுராவுக் கென்றார்''

கம்சன் தன் அந்தப் புரத்திற்கும் அக்ருரர்

தன் இல்லத்திற்கும் செல்லல்

அக்ருரரை இவ்விதமாக அனுப்பிய பின்
ஆகாயக் கோட்டை தனைக் கட்டித் தன்
அமைச்சர்களையும் அனுப்பிய பின்னர் –தன்
அந்தப்புரம் சென்று சேர்ந்தான் கம்சன்

அங்ஙனமே அக்ரூரர் தாமும் உடன்
அரச கட்டளை தனை ஏற்று
அவ்வாறே தாம் செய்வதாய்ச் சொல்லி
அவரடைந்தார் தம் அகம் தனையே

கேசி கம்சன் ஆணைப்படி குதிரை வடிவம்
எடுத்துக் கோகுலம் வருதல்

முன்னர் கம்சனின் வார்த்தை கேட்ட
முழுக் கயவனாம் கேசி என்னும் அசுரன்
முரளிதரனைக் கொல்ல எண்ணி
முன் பாய்ந்து செல்லும் பரியினைப் போல

வடிவினைத் தாங்கி அவன் தன்னுடைய
வாலினால் மேக மதனைச் சாடினான்
கெடுமதியாளன் தன் குளம்பின் ஒலியால்
கேடு செய்திடக் கோகுலம் வந்து

பூமியைக் குளம்பாற் பிளந்து கொண்டு
பேரொலி தன்னை எழுப்பிய வண்ணம்
தேனினும் இனிய கண்ணனைக் கொல்லத்
தேடியே வந்தடைந்தான் கேசி

தூமதியாளன் தன்முன் வந்து
தோன்றிடக் கண்ட கண்ணன் அவனைத்
வா நெருங்கி என்றருகே அழைக்கத் –தாவி
வந்த அந்தப் பொல்லாப் பரியின்

கேசி வதம்

வாயினில் தன் இளம் கரமது தன்னை
வசுதேவரின் அருமை மிகு மைந்தன்
போய்விழும் பொந்தினில் பாம்பெனவே தான்
புகுத்தித் தன் கரமதைப் பெருத்திடச் செய்தான்

குதிரையாம் கேசியின் வாயினுட் சென்ற
குழந்தைக் கரம் உரு பருத்துப் பெருக்க
மதுரையாளும் மாமன் கம்சனாம் மன்னனின்
மனதிற்கிசைந்த நற்தோழன் கேசி

அதிவிரைவாகவே மூச்சுத்திணறித் தன்
அங்கம் வியர்க்கக் கைகால் உதறி
விதி முடிந்து செத்து வீழ்ந்தான் மண்ணில்– தன்
வினை தன்னைச் சுட்டிடுமன்றோ!

சங்கடம் சிரமமு மின்றித் தன்
சாதுூர்யத்தால் கேசி தன்னைப்
பங்கயக் கண்ணன் வதைத்த
பாங்கினை நாரதர் கண்டார்

தேவரிஷி நாரதர் கண்ணனிடம் ரகசியமாகக் கூறுதல்

கண்ட தேவரிஷி நாரதர்
களிப்புடன் மனம் மகிழ்ந்து
அண்டங்கள் அனைத்துமான
அச்சுதன் புகழினைப் பாட
சந்தடி செய்யாமல் வந்து
சத்தியம் காக்கும் புருஷோத்தமனை
வந்தனம் செய்து மகிழ்ந்து பின்
வணங்கிச் சொல்வார் வருமாறு

"அண்டம் அனைத்தினுள்ளும்
அணுவாய் உறைபவனே!
கொண்டல் மணிவண்ணா அளவு
கூறிடாச் சிறப்புக்களைக்
கொண்ட யோகீஸ்வரனே! இந்த
கோகுலத்தின் உயிரே!
கண்டேன் பக்தவத்ஸலா, உம்
கரமதால் கேசி மாண்டதை!

குதிரை உருவெடுத்த அந்த
        குணங்கெட்ட கேசி கனைத்தால்
பதறியே தேவர் கூடத் தம்
        பதவியை விட்டோடுவர்!
அத்தகைய கேசியை நீர்
        அரை நொடியில் கொன்றீர்
மெத்தவும் நன்று கேசவா நான்
        மேலும் காணப் போவதையும் கேள்

குவலயம் ஆளும் கம்சன் ஏவிடும்
        குவலய பீடம் யானையை, மல்லரை
அசுரன் முஷ்டிகன், சாணூரன், கம்சன்
        அவன் படை, நட்பு, யாவும் இருதினத்தில்

நீர் கொல்லும் நேர்த்தி காண்பேன் அத்தோடு
        நில்லாமல், நீர் பின் எஞ்சி இருக்கும்
சங்கன், யவனன், முரண், நரகன் இவரை நீ
        சம்கரிப்பதையும் காண்பேன் யான் பின்

இந்திரலோகம் சென்று பாரிஜாதம் நீ
        இங்கு கொண்டு வருவதும் காண்பேன்
இந்திரன் தோல்வி காண்பேன் இன்னும்
        எத்தனையோ வித்தை காண்பேன் பரந்தாமா

அழியாத ஞானத்தால் உம்
        ஆத்மானந்த அனுபவத்தால்
நிலையானவரே நீர்
        நீள் விசும்பு நிறைத்தவரே உள்
கலையாத வாய்ம்மையால் எக்
        காலத்தையும் கடந்தவரே —உம்
விலையில்லா இணை மலரை
        விரும்பிச் சரண் எனப் பணிந்தேன்"

கார்வண்ணன் கழலடியைச் சரணம் என்று
கனி இசை நாரதர் வணங்கித் தமோதரனைக்
கண்டதால் தம் மனம் மகிழ்ந்து நிறைந்திடக்
களிப்புடன் அகன்றார் அவ்விடமிருந்து

### அக்ரூரர் மறுநாள் கண்ணனைக் காணப் புறப்படுதல்

கம்சனின் ஆணையைச் சிரமேற் தாங்கிக்
கண்ணியரான அக்ரூரர் அன்றிரவைக்
கம்சனின் தலைநகர் மதுராபுரியில்
கழித்துப் பின் காலையில் தேரினில் ஏறி

கமலக் கண்ணன் கார்முகில் வண்ணன்
களிப்புடன் வளரும் கோகுலம் நோக்கி
கனிந்த மனமுடன் அக்ரூரர் செல்ல –மனம்
களித்திடினும் அவர் சிந்தனையதுவோ

### தேரில் அக்ருரரின் சிந்தனை

தவயோகியர் தாம் வணங்கும் கண்ணனின் – திரு
தாமரைப் பாதத்தை யான் காண்பதற்கு
தானம் என்ன நான் செய்திருப்பேன் ? அந்த
தாமோதரனை நான் பார்ப்பதற்கு

புண்ணியம் ஏதோ செய்திருப்பேனோ –இன்று
புருஷோத்தமன் அடிமலர் சேவிக்க நான்
பண்ணிய பாவம் முற்றும் அறபிறவிப்
பயன்பெற்றேன் என்று அக்ருரர் எண்ணி

கம்சனின் தூதனாய்ச் செல்லும் எனைக் கண்டு
காளிங்க நர்த்தனன் என் சொல்வாரோ–யது
வம்சத்தின் நாயகன் வசுதேவன் குமரன் தன்னை
வணங்கும் அக்ருரர் என் சித்தமறிவாரென்றும்

ஐயன் திருப்பாதம் தனை வணங்கி நான்
அகமுருகி இருகரம் குவிக்க அவர்
அன்புடன் "அப்பா, அக்ரூரா" என்று
அழைத்தாலே யான் அனைத்தும் பெற்றவனே!

### சூரிய அஸ்த்தமன வேளையில் அக்ரூரர் கண்ணனின் அடிச்சுவடிகளைக் கண்டு உருகுதல்

என்றெல்லாம் மனதில் எண்ணியவாறே— தம்
இரதத்தில் கோகுலமடைந்தார் அக்ரூரர்
சென்று ஆதவன் மறைந்திட – மாலவன்
சேவடிச் சுவடுகள் தமைக் கண்டாரவர்

ஆனிரை தங்கும் கொட்டிலில் தாமரை
அங்குசம், யவம் முத்திரை கொண்ட
புண்ணியன் பாதச் சுவடிகள் அந்தப்
பூமியில் பதிந்து அலங்கரிக்க –மனம்

பூரித்து ஆனந்தக் கண்ணீர் பெரும்
ஆறென வழிய அக்ரூரர் மெய்
அன்பினாலே அகம் நெகிழ்ந்துருகி
அந்த அனுபவத்தாலே மெய் சிலிர்த்து

### கண்ணனின் பாத துளிகள் மேல் அக்ரூரர் புரளுதலும் அந்நிலையின் சிறப்பும்

என்னுயிர்க் கண்ணனின்
இனிய பாத துளிகள்
இவை, இவை என்றே
அக்ரூரர் கூவி
தன்னுடைய இரதத்தைத்
தான் விட்டிறங்கி
தடையிலா மகிழ்வோடு அந்த
தாட் சுவட்டில் புரண்டே எழுந்தார்

நான், எனது என்னும்,
அகங்காரத்தை விட்டு
நலிய வைக்கும் பயம்
சோகத்தை நீக்கி
வானென விரிந்து
வணக்கத்திற்குரிய
வடிவினன் கதை கேட்டு அவன்
தரிசனம் காணுதல்

அளித்திடும் பேற்றிற்கு
அளவேது மில்லை
அதனை அறிந்தவர்
அடைந்திடும் பயனே
உலகில் உடலதை
எடுத்து உலவுபவர்
உன்னதப் பெருநிலை
என்றுணர்ந்த அக்ரூரர்

அக்ரூரர் கண்ணன் பலராமனைக் காணுதல்

கன்றுக் கிரங்கிப் பால்
சொரியும் பசுக்கள்
கட்டியிருக்கும் மாட்டுத்
தொழுவிற்குச் செல்லும்
நன்றாய் மலர்ந்த கார் காலத்
தாமரை யொத்த
நளினமிகு திரு எழில்
விழியழகுடனே

மஞ்சள் ஆடை திரு
மால் உடற் தழுவ
மயக்கும் நீல ஆடை
பலராமன் அணிந்திருக்க

மிஞ்சும் பேரழகுடன்
மிளிரும் பாலவரை
மிக அருகினிற் கண்டு
மயிர்க் கூச்சடைந்து

ஆனந்தக் கண்ணீர்
அருவி யெனப் பெருக
அழகிய கண்ணன்
பலராமனைக் கண்டதால்
அக்ருரர் பரவச
நிலையடைந்து —நா
அசைக்கவும் மறந்து தன்னை
அறிவிக்காமல் நின்றார்!

### கண்ணன் அக்ருரரை ஆலிங்கனம் செய்தது

நின்ற அக்ருரரை, நீல எழில் வண்ணன் —தன்னை
நினைப்பவர் நெஞ்சத்து நினைவினை அறிபவன்
தன் வலக்கையால் தான் அவரைப் பற்றித்
தன்புறம் இழுத்துத் தழுவிக் கொண்டான் அன்பாய்

### கண்ணன் பலராமனுடன் அக்ருரர் நந்தருடைய இல்லம் சேர்தல்

உறுதியான மனம் படைத்த
பலராமன்—தன்னைக்
கருதி வணங்கிய அக்ருரர்
தம்மைத் தழுவி,
தம் கையால் அவர்
கரம் பற்றித்
தம்பியுடன் தம் இல்லத்திற்குள்
அழைத்துச் சென்று

## பலராமன் அக்ரூரரை வரவேற்று உபசரித்தல்

அன்புடன் அக்ரூரருக்கு நல்வரவு சொல்லி
அழகிய ஆசனத்தில் அமரச் செய்து
முறைப்படி அவர்கால்களை அலம்பி – மகிழ்வாய்
முனைந்து பாத பூசை நிறைவாய்ச் செய்தார்

தருமம், அறிந்தவரில் சிறந்த பலராமன்
தக்க விதமாய் அக்ரூரரை உண்ணச் செய்து
தாம்பூலம், சந்தனம் மாலை யளித்துத்
தக்க நல் உபசாரம் செய்து மகிழ்வித்தான்

அவர் அன்பினில் அக்ரூரர் மனம் மகிழ
அன்பளிப்பு கண்ணன், பலராமன் அளித்த பின்
அழகிய மெத்தையில் அமர்ந்த அக்ரூரர் –தன்
ஆவல் அனைத்தும் கை கூடப் பெற்றவராய்

வரும் வழியில் தான்
எண்ணிய தனைத்தும்
வரப்பிரசாதமாய்த் தன்னை
வந்து சேர்ந்ததால்
பெரு மகிழ்வோடு அவர்
நினைந்து நிறைந்ததால்
பிறிதொன்றையும் அவரங்கு
வேண்டினாரில்லை!

## கண்ணன் கம்சனின் நடவடிக்கைகளைப் பற்றி வினவுதல்

மாலைச் சிற்றுண்டியை அவர்
மகிழ்வாய் உண்ட பின்
மாலவன் தன் மனதிற் கினிய
அக்ரூரரை நோக்கி –தாய்

மாமனாம் கம்சனின் நடத்தை
யினோடு அவன்
மனதின் எண்ணங்கள்
என்ன வென்று கேட்டான்

"எம்மாலே எம் தந்தை
தாயார் அடைந்த
இன்னல்கள் எத்தனை?
எண்ணத்தான் கூடுமோ?
எம்மாலே அன்றோ
எம்முடன் பிறந்தவர்
எல்லோரும் எமலோகம்
செல்லும்படி ஆயிற்று!

சிறையில் எமைப் பெற்றவர்
கை கால் விலங்குடனே
சித்தம் கலங்கிடக்
காரணம் யாமன்றோ?
முறையால் மாமனாய்க்
கம்சன் ஆனாலும் அம்
மூர்க்கனுடைய ஆட்சியில்
முறையேது? வரையேது?

நம் யது குலத்தைப்
பிடித்த வியாதியாய்
நஞ்சன்ன மனம் கொண்ட
கம்சன் அரசாள
நம் தோழர், சுற்றத்தின்
நலம் பற்றி பேசுவதில்
நன்மைதான் ஏது?
நாடறிந்த உண்மை தானே?

ஆயினும் ஐயனே அக்ரூரரே
உம் வரவை
ஆவலுடன் எதிர்பார்த்த
எம் ஆசை நிறைவேறியது
வாயினிக்க வார்த்தை சொல்லும்
வஞ்சமில்லா நெஞ்சுடையீர் –நீர்
வந்த காரணத்தை விளக்கிடுவீர்"
எமக் கென்றான்.

அக்ரூரர் கம்சனின் ஆணையைக் கூறுதல்

கண்ணனின் கனி மொழிகளைக்
காதிற் கொண்டு அக்ரூரர்
"கம்சனின் தூதனாய் வந்தேன்
கமலக் கண்ணா இங்கு நான்
கம்சன் உமைக் கண்டு கொண்டான்
வசுதேவர் மைந்தரென்று
காலம் தாழ்த்தாது உமை
அழைத்து வர (எனைப்) பணித்தான்" எனக் கூற

கண்ணனும் பலராமனும் அரச கட்டளையை
நந்தரிடம் அறிவித்தல்

தந்தையாம் நந்தரிடம்
தனயராம் பலராமன், கண்ணன்
குந்தகம் செய்யும் கம்சன்
குறித்த கட்டளையைச் சொல்ல

சிந்தையில் செம்மையுடைய
சீர்மிகு நந்தர் உடனே
முந்தியே கிளம்ப காணிக்கை, பால்
முதல் தயிர், வெண்ணெய் நெய்

எனப்பொருள் யாவும் திரட்டி
எடுத்துச் செல்வோம் மதுரை
எனக் கோபர் தமக்கு ஆணை
இசைவாகக் கூறிப் பயணம்
மேற்கொள்ளும் ஏற்பாட்டினை
மேவியே செய்யக் கண்ட
மென் மலர்க் கோபியர் மனம்
மெய் பதறிக் கொதித்தார்

*கோபியர் கிருஷ்ணனின் பிரிவை தாங்க முடியாமல் பிரமனைப் பழித்துப் பேசியது*

"பிஞ்சு மதலையர்
பேதை விளையாட்டென
வஞ்சியர் எமை யெல்லாம்
வாசுதேவருடன் ஆட விட்டு—இன்று
நஞ்சென எமைப் பிரிக்கும்
விதி செய்த பிரமனே —உன்
நெஞ்சமெலாம் வஞ்சமென
நிந்தித்தார் கோபியரெல்லாம்.

உமது படைப்பின
மொத்தச் சிறப்புமே
உத்தம ஹரியின் சில
அம்சத்துள் அடங்கும்
எமது கண்ணார யாம்
அனுபவித்த கற்பகத்தை
இன்று குருரமாய்ப்
பிரிக்கின்றீர் அக்ருரர் மூலம்

## கோபியருக்குப் பிறர் உதவி கிட்டாததால் தாமே கண்ணனின் தேரை மறிக்கத் தீர்மானித்தல்

நம்மோடு இந்நாள்வரை வளர்ந்த
நம் முகில் வண்ணன்
நமை விட்டுச் செல்கின்றான்
நம்பால் இரக்கமே அற்று
அம் மாணிக்கத்துடன் செல்லும்
அறவோரால், கோபர்களால்
ஆண்டவனாலும் நமக்குதவும்
அருங்காலம் கடந்ததனால்

தோழியரே! நாம் கூடித்
தேர் மறித்து நம் திருவைக் கேட்போம் —நம்
காளிய நர்த்தனனைக் நம்மாற்
காணாமற் வாழப் போமோ
வாழி! நீ மணி வண்ணா —நீ
வளர்ந்தது எம் கோகுலத்தில் —உன்
தோழியர் எம் மனதின்
துடிப்பெல்லாம் உனையறியுமே நீ

## கோபியர் பழைய நாட்களை நினைத்துப் புலம்பித் தவித்தல்

மாலை வேளையில் கோபர்
பலராமன் புடைசூழ
மயிற்பீலி அலங்கரிக்கும்
உன் சுருள் கேசம் புழுதி படிந்து —வன
மாலை துலங்க புகுவாய்
கோகுலம் குழலூதி —எமை
மயக்கும் விழிப் பார்வையுடன்
மாதவனே அதை மறந்தனையோ?"

## மறுநாள் காலை அக்ரூரருடன் புறப்பட்ட கண்ணன் தேரை கோபியர் மறித்தல்

என்றே ஏங்கி ஆய்ப்பாடி
எழிற் கோபியர் மனம் வருந்த
எழுந்தான் கீழ்த்திசை தன்னில்
ஏழு பரி ரதம் பூட்டியவன்

காலைக் கடன்களை முடித்த பின்பு
களிப்புடனே அக்ரூரர் தாமும்
கண்ணன், பலராமனுடன்
கம்பீரமாகத் தேர் ஏற, கோபியர்

"உற்றார் உறவு நட்பு யாவும்
உடனிருந்து நமக்கு என்ன பயன் ? எம்
உள்ளம், உயிரெல்லாம் உகந்தவனே நீ
கள்ளத்தனமாய் எம்முடனிருந்து

ஊனை உருக்கி எம் உயிரிற் கலந்து இன்று
ஓடுகின்றாய் எமை ஒதுக்கி விட்டு, எம்
பானை வெண்ணெய் உண்டவன் நீ இப்
பாவையர் மனம் கொள்ளை கொண்டவனே

கோகுலம் தனை விட்டு நீ சென்றால் இக்
கோபியர் மனதைத் துயர் கொல்லும்
கோவிந்தா" என்றவர் ஓலமிட்டுக்
கூவியமுது கண்ணன் தேர்மறிக்க

## கண்ணன் கோபியரைத் தேற்றிப் பின் பிரிதல்

வருந்தும் தோழியராம்
வஞ்சியர் கோபியர்க்கு
விருந்தான மாதவன் விரைவில்
வருவேனென்று

திருந்த நல் வார்த்தை சொல்லித்
தேர் ஏறக் கோபியர் தம் மனதைத்
தேர்பின்னே செல்ல விட்டுத்
தேம்பிச் சிலையாய்ச் சமைந்தார்

கோபியர் மனம் தெளிதல்

இனிக் கண்ணன் திரும்பி வருவது என்பது
இயலாது அதனால் எட்டாத கனிக்காக
ஏங்காமல் நம்மோடு அவன் கூடியிருந்த
பாங்கான நாட்களின் பசுமையை எண்ணியே

பாடியே ஆடியே பண்பட்டிடுவோம் என
கூடியே கோபியர் குறித்து மாதவனைத்
தேடிடும் மனதின் திசையினைத் திருப்பி விட
ஓடின நாட்கள் ஒரு விதமாகவே!

மதுரை செல்லும் வழியில் யமுனைத்
துறையில் நிகழ்ந்த மாய வித்தை

அக்ரூரர் தேர் ஓட்ட
அண்ணனோடு ஸ்ரீதரன்
அலங்காரத் தேர் ஏறி
அதி விரைவாகவே
அன்பான கோபியர்
அகமெல்லாம் நிறைத்தவாறே
அவ்விடம் தனை விட்டு
அகன்றார் வாயு வேகத்தில்

மாமன் சொன்ன வண்ணம்
மாயக் கண்ணனவன்
மதுராபுரி நோக்கி
மயக்கமின்றிச் செல்லுகையில்

பாவத்தைப் போக்கும் யமுனைப்
பனிநீர் துறை யடைந்து
பலராமனுடன் கை கால் அலம்பி
பரிசுத்தமான பின்

இரத்தினம் போல் ஒளிரும்
இனிய நீர் அருந்திப்
புரவிகள், ரதம் நிற்கும்
பூவெழிற் சோலை யடைய
கண்ணன் பலராமனைக்
கனிவுடன் அக்ருரர்
வண்ண ரதத்திலே
வகையாய் அமரச் செய்து

பின்னர் அவர்களிடம்
பிரியமாய் விடை பெற்றுத்
தன்னைச் சுத்தி செய்யத்
தான் யமுனை நதி யடைந்து
என்றும் நிலைத்திருக்கும்
இனிய வேதத்தினை
நன்றாய்த் திருந்தச் சொல்லி
நதி நீரதனுள் முழ்க

அங்கு கண்டார் அக்ருரர்
அன்புடை வசுதேவர் மைந்தரை
பங்கயக் கண்ணனுடனே
பாங்குடை பலராமனையும்!

தேரில் பாலரைக் கண்டு
திகைத்து அதிசயத்து
திரும்பவும் நதியில் மூழ்கத்
திருந்தவே தெளிவாய் அங்கு

நீரிலும் அவரைக் கண்டார் –நல்ல
நினைவையே கொண்ட அக்ருரர்
பாரினில் பாலராகத் தாம்
பார்த்த பரந்தாமன் தனையே!

அக்ருரர் கண்ட பகவானின் தோற்றம்

அசுரர் கந்தருவர் சாரணர் சித்தர்
அனைவருமே தலை வணங்கித் துதிக்கும்
ஆதிசேஷனோடு நீல வண்ணனை நீரில்
அமிழ்ந்து அக்ருரர் கண்டார் வருமாறு

பங்கய இதழாய்ச் சிவந்த
பாங்கான விழிகள் சிரிக்க
மங்களத்தைக் குறிக்கும்
மஞ்சட் பட்டாடை தரித்து
சங்கொடு சக்கரம் கதை
சாந்தமாய் அருளும் கரமுடன்
வங்கங் கடல் கடைந்த
வண்ணத் திருமேனி கண்டார்

அக்ருரர் பகவானை வணங்கித் துதித்தல்

தான் கண்ட அதிசயத்தால்
தனை மறந்து நின்ற அக்ரூரர்
தான் தெளிந்து தலை வணங்கித்
தன் உளம் ஒன்றி, உருகி
தன் இரு கரம் குவித்துத்
தன் மனம் தளும்பிடவே
தழு தழுத்து உடல் சிலிர்த்து
தக்க விதமாய்த் துதிகள் செய்தார்

## அக்ருரர் புவி மாந்தர் இயல்பினால் தான் இன்னும் மூடனாய் இருப்பதாய்க் கூறுதல்

"பகவானே உம்முடை
மாயையாம் லீலையினால்
பாரில் உள்ளோர் தம்
பாழ் மனம் பற்றினால்
நிகரில்லா உனை அறியாது
நின்று செய்வினையாலுழன்று
நித்தமும் நான், எனதென்று
நினைக்கின்றார் ஏதேதோ

மனை, மக்கள், பொருள், சுற்றம்
மாயனே! கனவைப் போன்றவை – இவற்றை
உனைப் பணிந்தும் மூடனாய் இன்னும்
உண்மை என நினைக்கின்றேன் யான்!

## அக்ருரர் பகவானை உணர்ந்து போற்றுதல்

அறிவே உன் உரு, அவ்
அறிவின் அடிப்படையும் நீ
அண்ட சராசரமும்
அவற்றின் நாயகனும் நீ
பிறிதெது வென்று பகுத்துணராப்
பேராற்றலும் பிரம்மமும் நீ
சிறியேன் உனைக் கண்டேன் என்
சிரம் தாழ்த்தி வணங்குகின்றேன்!

சித்தத்தை நடத்துவிக்கும்
சீராளா ஜனார்த்தனா –நீர்
சீவன் அனைத்தையும் உம்முள்
சேர்த்தொடுக்கும் சங்கர்ஷணரே!

இத்தினம் அக்ரூரராம்
        எந்தனுக்கு அருள் புரிந்தீர் – உந்தன்
இணைமலர் திருவெழிலை
        எளியேன் யான் வணங்குகின்றேன்

வித்தையாய் விளங்கும் பல நிகழ்ச்சிகளும் அவை
விளைவிக்கும் செயல் நிலை யாவுமாகிய
சத்தியனே உம்மை நான் சரணடைந்தேன் –உயர்
சத்பொருளே என்னை நீர் காத்திடுவீரே!

குத்தமில்லாக் கோபியருடன்
        கொஞ்சி விளையாடிய
கோகுலத்தின் கொழுந்தே –யது
        குல விளக்கே நீர்
மெத்தவே விளையாடுகின்றீர்
        மேக வண்ணா! உந்தன்
மேன்மை தனைப் புகலுவதும்
        எளிதோ என்னால்?'' என்றிட

கண்ணன் மறைதல்

ஆடை புனைந்து மேடையில் நடிகன்
        அவன் பங்கு முடிந்ததும் மறைவது போல
அண்ட மனைத்தையும் அளந்த மாயன் –நீரில்
        அக்ரூரருக்குத் தன்னைக் காட்டியவன் மறைந்தான்!

கண்முன் தோன்றிய கோபாலன் நீரில்
        காணாமல் போய் விடவே பண்டு
விண் மண் அளந்த மாயவன் தன்னுடை
        வியத்தகு லீலை இதுவென அக்ரூரர்

என்ன விந்தை ! என நீரிலிருந்து
        எழுந்து, வியந்து, மகிழ்ந்து அனுட்டானம்
எல்லாம் முறையாய் முடித்துப் பின்னர்
        ஏகி ரதமதை நோக்கி வந்தடைந்தார்

### கண்ணன் அக்ரூரரிடம் வினவியது

"பாரிலோ, பளிங்கு நல் நீரிலோ அன்றிப்
பனிமதி வரும் விண் மீதிலோ நீர்
பார்த்தீரோ ஏதும் விந்தை? —நும்முக
பாவனை மாறித் தோன்றுதே" என

நீரிலும் நிலத்திலும் ஒருங்கே தம்மை
நின்று காட்டிய மாயன் விரிந்த
நீள் விசும்பின் நிறத்தான் தாமோதரன்
நிர்மலனாய் அக்ரூரரைக் கேட்க

### அக்ரூரர் பதிலும் அதன் பின் அவர்களுடன் மதுராபுரியை அடைதலும்

"பாரிலும் பளிங்கு நல் நீரிலும் அன்றிப்
பனி மதி வரும் விண் மீதிலும் எங்கும்
நீர் இருக்கும் நேர்த்தியைக் கண்ட பின்
நிகழும் அதிசயம் பிரிது முண்டோ?

நீர், நிலம், விசும்பு மற்றும் எங்கும்
நிகழும் விந்தை யாவும் உன்னிடம்
நீலவண்ணா, நெடுமாலே உறைவதால்
நின்னைக் கண்டால் பாராதது என

பாரில் அதிசயம் ஏதுமில்லை" என விடை
பகர்ந்து அக்ரூரர் தேரில் ஏறி
பலராம கிருஷ்ணர்களை மதுராபுரிக்குள்
பகல்முடியும் வேளையில் அழைத்துச் சென்றார்.

### மதுராபுரியில் அவர்கள் நந்தர் தங்கி இருந்த வனத்தை வந்தடைதல்

பசுவின் பால், தயிர் வெண்ணெய் நெய் என
பலவிதக் காணிக்கைப் பொருட்களுடன் வந்த
வசுதேவர் நண்பர் நந்தர், தம் குழுவோடு
வந்து காத்திருந்த வனம் வந்தடைந்தது தேர்

### கண்ணன் அக்ரூரரைப் பார்த்துச் சொன்னது

நந்த கோபர்கள் நாட்டமுடன் காத்திருந்த
அந்த வனம் சேர்ந்து அக்ருரர் தேர் நிறுத்த—தன்னை
வந்தனை செய்து வணங்கும் அக்ருரர் கரத்தை
விந்தைத் திருமாலவன் விருப்புடனே பற்றி

"மதுராபுரிக்கு எம்மை
மகிழ்ச்சியுடன் அழைத்து வந்த
மாண்பு மிகு அக்ருரே நீர்
முன்னே செல்வீர் நகருள்
யது குலத் தோழருடன்
இங்கு இளைப்பாறிய பின் —யாம்
மதுரா நகர் எழிற் காண
மெதுவாக வருவோமென்றிட

### அக்ருரர் கண்ணனிடம் வேண்டிக் கூறியது

உம்மை இங்கு விட்டு விட்டு
ஊருக்குள்ளே நான் செல்ல
என் மனம் சிறிதும் ஒப்பவில்லை
ஏழைகட்கு இனியவரே
உம்முடை பாதத் துளியது தான்
எம்முடை இல்லத்திற்பட்டால்
இல்லறத்தான் என் இல்லமதும்
ஏற்றம் பெற்றுப் புனிதமாகும்

உம்மை வரவேற்று எம் மனையில்
 உகந்து பாத பூசை பண்ண
அப்பாத தூய தீர்த்தத்தாலே
 அக்னியோடு, பிதிர் தேவரெல்லாம்
எப்போதும் நிறைவு காண்பரன்றோ!
 எம் குறைகள் யாவும் நீங்கி விடும்''
என்றே அக்ரூரர் கண்ணனுடை
 இணையடி தொழுது பணிவாய்ச் சொல்ல

### கண்ணன் மறுமொழி

''உம் இல்லம் யான் வருவேன்
 உற்ற என் அண்ணனோடு —மாமன்
கம்சனை, யாதவர்க்குக்
 காலனாய் இருப்பவனை, எம்
வம்சம் மகிழ்ந்திடவே
 வதம் செய்து முடித்தபின்'' என ஹரி
அம்சமான கண்ணன் சொல்லி
 அக்ரூரருக்கு விடை கொடுத்தான்

### மதுராபுரியில் அக்ருரர் கம்சனைக் கண்டு பின் தன் இல்லம் சேருதல்

மன ஆவல் அடங்கப் பெறாத அக்ருரர்
 மாமதுரா புரிதனை யாளும் போஜ
மன்னராம் கம்சன் வாழுகின்ற அழகிய
 மனையடைந்து மன்னரை வணங்கி அவரிடம்

தான் கோகுலம் சென்று
 பலராம கிருஷ்ணரைத்
தானழைத்துக் கொண்டு வந்த
 செய்தியைச் சொல்லி

தன் கடமையைச் செம்மையாகத்
தான் முடித்த பின்
தன் இல்லம் தனை அவரும்
சென்றடைந்தாரே

### கிருஷ்ணன் முதலானோர் மாலையில் மதுராபுரிக்குள் வருதல்

கோபர்களோடு கோபாலன் பலராமன் முன்
குறித்த படி பகலில் இளைப்பாறிய பின்
சீல மிகு கோலாகல மதுராபுரியின்
சீரெல்லாம் காண அந்திப் பொழுதினில் வந்தார்

### மதுரா புரியில் அரச வீதியில் பலராம கிருஷ்ணர்கள்

இனியன் பலராமனும்
இன்னமுதாம் கண்ணனும்
அரச வீதியில் ஓர்
அணங்கு எதிர் வரக் கண்டார்
கூன் விழுந்த முதுகுடன் –பிற
குறையில்லா எழிலுடனே
குமரி இளம் வஞ்சியவள்
கொண்டு சென்றாள் நறுமண சந்தனம்

### கண்ணனின் கேள்வியும் அப்பெண்ணின் பதிலும்

"அழகிய தொடைகளை உடையவளே,
அம்மணியே நீ யார்? – நாங்கள்
அறிந்திட உண்மையைக் கூறிடுவாய்
ஆருக்கு இந்த வாசனைச் சந்தனம்

அளிப்பதற்காக நீ கொண்டு செல்கின்றாய் –இதை
அளிப்பாயோ நீ எம் இருவருக்கும்
எமக்களித்தாய் நீ காண்பாய் நலம்
ஏற்றம் எல்லாம் மிக விரைவில்" என்றே

கண்ணன் கன்னியைப் பார்த்து வினவ
கன்னியவளோ பதில் உரை சொல்லுவாள்
"கண்களிக்கும் வண்ண வடிவுடையீர் நான்
கம்சனுக்குச் சந்தனம் அரைத்தளிப்பவன் –அந்த

போஜராஜன் விரும்பும் என்
சந்தனம் பூச உம்மைப்
போற் தகுதி தான் படைத்தார்
வேறு யாருளர்?
நேசமிகுந்தவரே, என்பெயர்
திரிவக்ரை வந்து
வாசமிகு என் சந்தனத்தை
பூசி மகிழ்க" என்றாள்

வடிவழகு, மென்மை, புன்னகை பேச்சு நல்
வகையான கண்ணோட்டம் எல்லாம் அமைந்தவள்
வரையில்லா கருணை அருள் சொரியும் மனதினால்
வாசனைச் சந்தனம் விற்கும் திரிவக்ரையாம்

கன்னியவள் சொல் கேட்டு அண்ணனுடன் கண்ணன்
கச்சிதமாய் லீலை யொன்று நிகழ்த்திட எண்ணி
கைநிறைய சந்தனத்தை அள்ளிப் பூசினான்
கைமாறு நங்கைக்குச் செய்திட எண்ணி!

சந்தனம் பூசி மகிழ்ந்த கண்ணன்
திரிவக்ரையின் கூனை நிமிர்த்தல்

மன்னன் விரும்பும் நறும் சந்தன மதனை
மாற்ற மின்றித் தாம் கேட்ட உடனே
கன்னல் மொழி பேசி களிப்புடன் அளித்த –அக்
காரிகை கூன் நீக்கக் கண்ணன் எண்ணித்

தன்னிரு பாதத்தாலவள்
முன் கால் மிதித்துத்
தன்னிரு விரல் உயர்த்தி அவள்
தாடையைப் பிடிக்க
முன்பு அவள் உடலிருந்த
மூன்று கோணல்களும்
முகுந்தன் விரல் பட்டதும் கூன்
முற்றும் நீங்கிட

*கூன் நிமிர்ந்த திரிவக்கரை அவரைத்தன்*
*இல்லம் வருமாறு அழைத்தல்*

பொங்கும் பேரெழிற் கொங்கையோடு
அங்க மெல்லாம்
பங்கமே யில்லாப் பரி பூரண
எழிலாய் மாறிய
மங்கை தன் மனம் களித்து
மதுசூதனைத் தான்
தங்கி இருக்கும் இல்லம்
தான் வர வேண்டினாள்

*கண்ணன் அவளுக்கு மறுமொழி கூறி அனுப்புதல்*

"அழகிய மதுரா நகரில் நாங்கள்
ஆற்ற வேண்டிய கடமை உண்டு
அதனை நாங்கள் ஆற்றி முடித்த பின்
அவசியம் வருவோம் உன் இல்லம்"

என்றே கோவிந்தன் எழில் மங்கையிடம் – மிக
இனிமையாய்க் கூறி விடை தந்திடவே
நன்றென வணங்கி வஞ்சி நல்லாளும்
நனிமகிழ்ந்து தன் வழி சென்றனளே

### நந்தகுமாரர்கள் தனுர்யாக சாலை அடைதல்

கன்னிகை நல்லாள் கண் மறைந்ததுமே
கண்ணனும் அண்ணன் பலராமனும் அவ்
ஊர்மக்களிடம் வழி விசாரித்து
உற்ற தனூர் யாக சாலை யடைந்தார்

போற்றியும் பூசித்தும் பாதுகாக்கப் பெற்று– அங்கு
பொலியும் அலங்காரம் பொருந்திய வில்லை
சீற்றமாய்க் காவலர் சினந்து தடுத்தும்
ஸ்ரீதரன் அவரைச் சிறிதும் பொருட் படுத்தாமல்

### கண்ணன் வில்லை ஒடித்தல்

இடக் கரம் கொண்டு விளையாட்டுப் பொருள் போல
எடுத்தான் வில்லை ஏற்ற மிகு நந்த கோபாலன்
எடுத்த அவ்வில்லை நாணேற்றி நொடியில்
இழுத்தான் யாவரும் காணும் படியே

கரிமத யானை கரும்புக் கழியை
முறிப்பது போல முகுந்தன் வில்லை
சரிபாதியாகத் தான் முறித்திடவும்
அரியாம் பாலனை எதிர்த்த காவலர்

தமையெல்லாம் வதை செய்து
தனுர் யாகசாலை அது
தனை விட்டு ஏகிச் சென்று
தாம் வந்து தங்கியிருந்த

உபவனம் தன்னை
உவப்புடன் அடைந்து
உண்டபின் இரவினை
உறங்கிக் கழித்தார்

கம்சன் கண்ணன் வில்லிறுத்த செய்தி
கேட்டலும் துர்நிமித்தங்களைக் காணலும்

ஆழியில் கண்டான் கம்சன் தன் பிம்பம்
அவன் தலை அதற்கு இல்லாமலே
ஆதவன் மதியைக் கண்டான்
அவற்றின் எண்ணிக்கை இரு மடங்கெனவே

தழுவினான் செத்த பிணத்தைக் கோவேறு
கழுதையில் சவாரி செய்தான் அந்தோ!
முழுவதுமாய் உயிர் குடித்து விடும் – விஷ
மூலிகை அருந்தக் கண்டான் –தன்

அரையிலோர் ஆடையின்றி
அணிந்து செம்பருத்தி மாலை
உடலெங்கும் எண்ணெய் வழிய
ஒருபாதை வழி போகக் கண்டான்

இதுபோல அபசகுனம்
இன்னும் பல கண்ட கம்சன்
எதுவும் செய்ய இயலாது அவன்
இரும்பு மனம் குழம்பலுற்றான்

கம்சன் இரவைத் தூக்கமின்றிக் கழிக்கப்
பொழுது விடிந்தது

துர்மதியாளன் தான் கண்ட
துர் நிமித்தங்களாலே
கண்ணுறக்க மின்றி மிக்கக்
கவலை யோடிரவைக் கழித்தான்

தொலையா வல்வினையால் கம்சன்
தூக்க மற்றுத் துயருற்றிருக்க
அலை கடல் இல்லம் விட்டு
ஆதவன் பணி துவக்கினானே!

### மறுநாள் காலையில் கண்ணனும் பலராமனும்

கல்லைப் பெண்ணாக்கிய
காகுத்தன் படிவமான
காளமேக வண்ணன் தன்
அண்ணனோடு அமர்ந்திருக்க
வலிய மற்போரைத் துவக்க –மல்லரை
வருக எனக் கூவி யழைக்கும்
துந்துபி ஓசை கேட்டு
துரிதமாய் விரைந்தாரங்கு!

### கம்சனுடை பாகன் குவலயா பீடம் எனும் யானையைக் கண்ணனைக் கொல்ல ஏவுதல்

ஆவலாய் அவர் விரைந்து மல்
அரங்கத்தை அடையு முன்னர்
குவலயா பீடம் பெயரைக்
கொண்டதோர் யானை அதன்
பாகனால் ஏவப்பட்டு
பலராம கிருஷ்ணர் முன்னே
வேகமாய் வந்து நீண்டு
விளங்கும் தன் துதிக்கையாலே

### குவாலயா பீடம் வதம்

கண்ணனைச் சுற்றித் தூக்கக்
கலங்கினர் உடன் வந்த கோபர்
கண்ணனோ கலக்கமின்றித் துதிக்
கையினை விலக்கி யானைக்
கால்களின் நடுவே இறங்கி –அது
காணாமல் ஒளிந்து நின்று
களிறதன் துதிக்கை பற்றி அதை
கருமலை யெனத் தரையிற் தள்ளி

யானைக்குப் பகையாம் சிங்கம்
தானுமது போல் மால் சீறி
யானையைத் தன் காலால் மிதித்து
யானைத் தந்தத்தைப் பிடுங்கி
அதனை ஆயுதமாய்க் கொண்டு
அக்குவலயா பீடமொடு
அதனைச் செலுத்தி வந்த பாகன்
அவனையும் கொன்றார் விரைந்து

மறுநாட் காலை கம்சன் அரசவை

மந்திரிய ரோடு மண்டலேசுவரர்
மற்றும் பலர் சூழ்ந்திருக்க
மனதிற் பெரும் கவலையோடு
மன்னர் கம்சன் அரியணையிருக்க

சாணூரன், முஷ்டிகன், கூடன், சலன்
தோசலனாம் மல்லர் தாமும் தம்
வீணான பெருமை விளங்க அலங்கரித்து
விரைந்து விருப்புடன் அவை வந்தடைந்தனர்

கம்சனின் அழைப்பை யேற்றுக்
காணிக்கை யோடு வந்து
அம்சமாய்க் கம்சனுக்கு
அதனை அவர் செலுத்திய பின்
நந்தரும் கோபர் தாமும்
நடந்து தம் மேடை யடைந்து
பந்தமாய் அமர்ந்து தத்தம்
பார்வையை அவையிற் பதித்தார்

## குவலயா பீடத்தின் தந்தத்தோடு கண்ணனும் பலராமனும் அரசவைக்கு வருதல்

தோழராம் ஆயர் சூழத் தம்
தோளில் தந்தத்தைத் தாங்கிக்
காலனுக்கும் காலனாகும்
கண்ணனும் பலராமன் தானும்
ஊழ்வலி உறுத்த அசரீரீ —முன்பு
உரைத்த வாக்குப் பலிக்கு மாப்போல்
பாழ்மனக் கம்சன் அவையில்
பார்வையாளராகப் புகுந்தார்!

## அவையினர் கண்ணனைப் பலநிலையில் காணுதல்

கொடியிடை மாதர் மனதைக்
கொள்ளை கொள்ளும் மன்மதனாய்—ஆவின
மடிகறக்கும் ஆயர்கட்கோ
மனதுவக்கும் நண்பனாய் உறவாய்
அடிமுடி காணவொண்ணா
ஆதிமுதலாய் மானிடர்க்கு
இடியென மல்லர்களுக்கு
இடையூறாய்க் கோபாலன் தெரிந்தான்!

கொடுங்கோலாட்சி புரிபவர்க்குக்
கொடிய தண்டனை யளிப்பவராய்த்
திடமாய் அருமைப் பெற்றோருக்குத்
திருவென விளங்கும் நல் சேயாய்

விட மனக் கம்சனுக்கோ கொல்ல
விரைந்து வரும் யமனேயாய்
மடநெஞ்ச மூடருக்குத் துவேஷியாய் மற்றும்
மாதவ யோகியர்க்குப் பரதத்துவமாய்

விருஷ்ணி வம்சத்தாருக்கு அவர்
விரும்பி வணங்கும் தெய்வமாய்
விளங்கும் பரந்தாமன்
பலராமனைக் கண்ட அவையோர் –அவர்

உருவெழிலை உவப்பருளும் கண்ணழகை
மருவில்லா தூய மலர்முகத்தைத்
திருவிளங்கும் தெய்வீகத்தை மனத்
தீங்கில்லாரெல்லாம் தம் ஆவல் தீரக் கண்டார்

பலராம கிருஷ்ணர்களைக் கண்ட
அவையினரின் எண்ணமும் பேச்சும்

கருவெழிற் கண்ணனைத் தம்
கண்களாரப் பருகியும்
பெருவலிவானவனைத் தம்
தோள்களாற் தழுவியும்
சிறுமதலைப் பிரானைத் தம்
நாசியினால் முகர்ந்தும்
திருமகிழ் மாறனைத் தம்
நாவினாற் துழாவியும்

இன்பம் கண்டு திளைப்பவர் போல
இருந்தார் அவர் தம் சுயநிலை மறந்து!
இளம் கண்ணன் பல ராமன் செய்த
இனிய வீர விளையாட்டினை நினைந்து

அன்பு மிகுந்து அவர்கள் மகிழ்ந்து
பின்வருமாறு பேசிக் கொண்டனர்
அரியின் அம்சமாகும் இவர்கள் நம்
அருமை வசு தேவர் மைந்தர்கள்

ஒருத்தி மகனாகப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாக ஒளித்து வளர்ந்த
தருக்கில்லாத் தாமோதரன் இவனே! இவன்
தயை அருட் கரத்தினால் மாண்டவர் பலரே!

பூதனை, சகடன்,த்ருணாவர்தன் கேசி
வேதனை செய் சங்கசூடன் தேனுகன் பலரோடு
மாடொடு, குதிரை, மலைப் பாம்பென வந்த
மாய அரக்கரை மாய்த்தவன் இவனே!

மருத மரமாய் உருமாறிய குபேரனுடைய
அருமை மக்களின் சாபத்தினை அகற்றிட
உருட்டி உரலை யிரு மரத்திடைச் செலுத்தி –வேர்
பறித்துத் தரை மரம் சாய்த்த பாலகன் இவனே!

மல்லர்கள் பலராம கிருஷ்ணர்களை
மற்போருக்கு அழைத்தல்

என்றே பல உரைகள் சபை
இருந்தோர் பரிமாறிக்
குன்றா எழிற் துலங்கி நிற்கும்
கோபாலன் பலராமனைத் தாம்
நன்றாய் இரு கண் குளிர
நல்லோர் கண்டுவக்கப் பெரும்
குன்றாய் நின்ற மல்லர் அவரைக்
கூவியழைத்தார் மற்போர் புரிய!

கண்ணன் மல்லர்களுக்குக் கூறியது

''பலமிகுந்த மல்லர்களே சிறு
பாலகர்கள் நாங்களன்றோ!
பார்க்க வந்தோம் இன்று உங்கள்
பராக்கிரம விளையாட்டதனை

பலத்தில் சமமான பிற
மல்லருடன் விளையாடிடுவீர்
நிலத்தில் இதுதர்ம
நீதி''யெனப் புகன்றான் கோபாலன்

சாணூரன் கூறியது

''பலராமா, கோபால கிருஷ்ணா
பாலகர் நீர் ஆயிடினும் –உம
பராக்கிரமத்தைக் காட்டிடவே –மற்
போருக்கு உமையழைத் தோம்
ஆயிரம் யானை பலம் கொண்டது
எங்கள் குவலயா பீடம்
அதனைக் கொன்ற நீர் இங்கு
அமர் புரியத் தக்கவரே!

வாயினாற் பேசப்பட்ட உம்
பெரும் புகழது வாம்
வார்த்தையினை இது நாள் வரை
கேட்டோம் காதால் (ஆனால்) இன்று
வந்து தனு சொடித்து எதிர்
வந்த யானையை வதைத்தீர் –நீர்
வயதில் இளையோன் என
வார்த்தை யாடித் தட்டுதல் வீண்

தருமத்தின் தலை தாழத்
தக்க காரணமில்லை –இனியும்
தயங்காமற் பலராமனுடன் எம்மைத்
தாம் வந்து மோதிடுவீர்
உருவத்தில் சிறிது பெரிது,
ஒற்றுமை நோக்காமல் இத்
தருணத்தில் எமை எதிர்ப்பீர் இத்
தரணியும் கண்டிட''வென்று

சாணூரன் என்னும் மல்லன்
சம்பிரதாயமாக
வேணு கோபாலனைக் கம்சன்
விரும்பிய வண்ணம் கொல்லத்
தானவன் தயாரகித்
தாமோதரனை அழைத்தான்
தன் தோழன் முஷ்டிகனைப்
பலராமனுடன் மோதச் சொல்லி

### சாணூரன் அறைகூவலைப் பலராம கிருஷ்ணர்கள் ஏற்றல்

சாணூரன் அறை கூவலைச்
சரி என்று ஏற்று முன்பு
வானை ஓரடியால் அளந்த
வைகுந்த மாலழகன்
சாணூரனைத் தான் எதிர்கக
சக்தி மிகுந்த பலராமன்
சந்தித்தான் முஷ்டிகனாம்
சாணூரன் தோழனையே!

### அவையினர் இந்த அநீதி கண்டு மனம் வருந்துதல்

அதர்மமாய் யுத்தம் ஒன்று
அரங்கிலே நிகழுவதையும்
அதனைத் தடுக்காது மன்னன்
அவருடன் தாமும் சேர்ந்து
அதர்மத்துக்குத் துணை போவதை
அவையினர் உணர்ந்த போதும்
அதைத் தடுக்கத் திறமின்றி
அவையினர் இருந்தார் அமர்ந்தே!

ஆயினும் பாவம் இதுவென
அவர் மனம் அரற்றிய படியே
அச்சிறு பாலரைப் பெரும்
அசையா மலை போன்ற மல்லர்
ஆவேசமாக மோதிட,
அச்சபை மகிழும் வண்ணம்
அச்சுதன் அனந்தன் இவரின்
அற்புத வீரம் கண்டார்

கண்ணன் -சாணூரன்; பலராமன்-முஷ்டிகன்
மற்போர் புரிதல்

கன்றோடு குன்று மோதும் விந்தைக்
கதையினைக் கண்டார் அவையோர்
நன்றல்ல நீதி அது என்றே அவர் மனம்
நடுங்கிடப் பார்த்துக் கொண்டிருக்க
இந்த இன்னிளம் பாலகர்கள்
இரும்பினை ஒத்த மல்லருடன்
கைகளைக் கோர்த்துக் கொண்டடித்தும்
கால்களாற் தள்ளி பின் மிதித்தும்

சுற்றியே வந்தும் மற்றவரைப்
பற்றிக் கீழே தள்ளியும்
முற்றுமாய் மல்யுத்தின்
முறை துறை யாவும் காட்டி
கூற்றம் போல் ஒருவரை யொருவர்
குறி வைத்துப் பிடித்து மோதி
மற்றவர் உயிர் பறிக்க
மல்யுத்தம் புரியலானார்!

சபையினர் பார்த்திருக்கச்
சாணூரன் தன்னைத் தூக்கி
அவை கண்டு வியக்க மாதவன்
ஆத்திரமாய்ச் சுற்றித் துணி

துவைத்திடுவான் போற் தரையிற்
தூங்கி எறிந்தவன் உடலைச்
சுவையற்ற சக்கையாக்கித் தன்
சூரத் தனத்தைக் காட்ட

பராக்கிரமம் மிகுந்த நம்
பலராமன் முஷ்டிகனைத் தன்
கரமதனாற் பிடித்துக்
கரகரவென்றிழுத்து
சரமாரியாய் அறையச்
சாணூரன் தோழனும் தன்
சக்தி எல்லாம் இழந்து
சாய்ந்தனன் சபை தன்னிலே!

காலனெனப் பலராமன் தனைக்
கண்டு முஷ்டிகன் கலங்கிட
வேழமெனப் பலராமன் தாக்க வாய்
வழியே உதிரம் வழிந்திடவே –பெரும்
காற்றினில் சாயும் மரம்போலக்
கம்சனின் மல்லன் முஷ்டிகன்
கூற்றுவன் உயிரைக் கொளக் கொடுத்து –வெறும்
கூடாகி விழுந்தான் அவை நடுவே

*அவையினர் மகிழ்ச்சியும் கம்சனின் சினமும்*

அக்கிரமமாய் நடந்த
அடாத மல்யுத்தத்தில்
அற்புதமாய் பாலகர் அசுர
மல்லரைக் கொன்ற
அதிசயத்தைக் கண்ணுற்ற அனைவரும்
போற்றி வாழ்த்த
அதர்மன் கம்சன் மனதில் அடங்காச்
சினம் கொண்டிருக்க

தம் தலைவரை இழந்த மல்லர்கள்
தாம் பயந்தொளிந் தோடிடத்
தமை எதிர்க்கத் துணிந்த மல்லர்
தாம் எவருமில்லாராய்
தாமரைக் கண்ணன், பலராமன் தம்
தோள்வலி வீரம் காட்டி முழக்க
தடதடவென முரசு ஒலித்தது நந்தர்
தனயருக்கு வெற்றி வாகை தனை சூட்டி!

### கம்சன் சினந்து சொல்லுதல்

முழங்கிய முரசிசையை —முழு
மூடனாம் கம்சன் நிறுத்தி
குலுங்கிடும் கோபத் தீயால் மனம்
குமுறியே கூறிடுவான்
"வசுதேவர் மைந்தர் இவரை
விரட்டுக நகரை விட்டு
பசு நிறை காக்கும் கோபரின்
பல்வளம் அனைத்தும் பறிக்க

நன்மதி யற்ற இந்த
நந்தரைக் கட்டிடுக
எந்நிதியரசை, உயிரை
இழந்திட மைந்தரைப் பெற்ற
துன்மதி வசுதேவரோடு
துணையா யவர்க்கிருந்த எந்தை,
வன் மதியாளரையும்
வதைப்பீர் தாமதியாமலென்றான்"

### கம்ச வதம்

கம்சனின் வார்த்தை வந்து
காதினில் ஒலிக்கு முன்னே
கண்ணன் துள்ளி எழுந்து
கடுகிக் கம்சனையடைய —அரி

அம்சமாம் பாலனைத் தன்
அருகில் கண்டும் அஞ்சாமல்
கம்சன் கை வாளுருவி இடக்
கரத்தால் கேடயமெடுத்தான்

விண்ணிற் பறக்கும் பருந்தினைப் போல
விரைந்து இடம் வலமாகச் சுழலும்
மன்னனாம் கம்சனைக் கண்டு மாலழகன்
மட்டிலாக் கோபம் கொண்டு வெகுண்டு

மண்ணில் ஊரும் பாம்பினைக் கருடன்
மாய்த்திட வகையாய்ப் பிடிப்பது போல
எண்ணிலடங்கா உரு அரு வானவன்
எல்லாம் தன் மயமான ஸ்ரீ விஷ்ணு

மணிமுடி தரித்த கம்சன்
மமதைத் தலை முடி பற்றிச் சிறு
துணியினை எறிவது போலத்
தூக்கி மற்களத்திற் போட்டு –பாம்
பணையின் மேற் கிடந்த பிரான் –புவி
பாரமாய் அவன் மேல் குதித்து
பணிவிலாக் கம்சன் உயிரைப்
பறித்தனன் பரந்தாமன் தானே!

சிங்கம் யானையை இழுத்து வருவதென – உயிர்
தங்கலின்றிப் பிரிந்த வஞ்சகக் கம்சனின்
அங்கத்தை நரசிங்கர் அம்சமானவன் –அவை
எங்கும் இழுப்பதை எல்லோரும் கண்டனர்

கண்டவர் தம் மனக் களிப்பினை பிறருக்கு
விண்டுரைக்க வாய் வார்த்தை வராதவராய்
பண்டைப் பரந்தாமனை நந்த கோபர் மகனை
பாலனாய் வந்து ஆய்ப்பாடியில் வெண்ணை

உண்ட வாயனைத் தன் உள்ளத்தால் புகழ்ந்து
கொண்டாடித் தமை மறந்து குளிர்ந்து சிந்தித்தார்
பண்டை நாள் பாழ்மனக் கம்சன் அச்சத்தால்
கண்ணனையே எண்ணிக் கலங்கி குழம்பி

உண்டு உறங்கிக் கிடந்த
  செயலதால் –இன்று
உய்ந்தனன், ஒப்பற்ற கண்ணனால்
  ஆட் கொள்ளப்பட்டான்
அரியணை அமர்ந்திருந்து அவன்
  எங்கே ஆண்டான்? மாறாய்
அவனை ஆண்டது கண்ணனின்
  நினை வன்றோ!

ஆஹா இது அற்புதம் என
  ஆரவாரக்குரல் எழுப்பி
ஆனந்தமாய் அந்த
  அரங்கம் திகழ்ந்தது
அதமன் கம்சன்
  அழிந்தான் கண்ணனால் –அவன்
ஆவி பெற்ற பெரும்
  பேறுஇது எனப் புகழ்ந்து!

உண்டுதான் உய்வு உன்மத்தனாய்ச் சிறிதும்
தொண்டு செய்தறியாக் கம்சனுக்கும் முக்தி
விண்டுரைக்கவொண்ணா வித்தகக் கண்ணன் –புவி
கண்டு கொள்ளவே காட்டி யருளினானே!

*கண்ணன் கம்சனுக்கு உத்திரகிரிகை*

*செய்து உய்வித்தல்*

காக்கும் தெய்வமாம் கண்ணன் மனம் மிக்க
  கலங்கிய அரசமாதரைத் தேற்றித் தாம்
போக்கிய உயிருக்கு நீர்க்கடன் அளித்து
  போஜராஜன் ஆவி உய்ந்திட அருளினான்.

## பலராமகிருஷ்ணர் தேவகி-வசுதேவரை சிறை மீட்டுப் பணிதல்

அசரீரி வாக்கால் முன் அசுரனாய்
மனம் மாறி
அதர்மமாய் ஆண்ட போஜ அரசனின்
சிறை யதனில்
பசி, தாகம், உறக்கம் மறந்து தம் பாலரைப்
பிரிந்து மனம்
பரிதவித்திருந்த தம்மைப் பெற்ற
நல் மனமுடைய

வசுதேவர்– தேவகி தாம்
வாழும் சிறைக் கூடத்திற்கு
வாசுதேவன், சங்கர்ஷணன்
வந்து சிறை திறந்து பெற்றோர்
கைகால் விலங்கு எல்லாம்
கழற்றித் தனயர் தம்
ஐயனின், அன்னையின்
அடிமலர் தனைப் பணிந்தார்

## தம் உண்மைத் தோற்றத்தை அறிந்து கொண்ட பெற்றோரைக் கண்ணன் மாயையினால் மயக்குதல்

தம் தாள் வணங்கும் இப் பாலகர்கள்
தரணியிதன் தனி முதல்வனென்னும்
தத்துவத்தை உணர்ந்த உள் நோக்கால் – தமைத்
தழுவாதிருக்கும் பெற்றோர் மனதைக்

கணத்தில் அறிந்து
கார்முகில் வண்ணன்
களங்கமில்லா அவர் பெற்ற
மாயக் கள்ளன்

கண்மூடித் திறக்கும் தன்
மாயையால் அவர்
கருத்தை மாற்றி மகவாய்த் தம்மைக்
காணச் செய்தனனே!

கண்ணன் பெற்றோரிடம் பேசிய உரை

குறையொன்று மில்லாக்
கோபாலன் பெற்றோரைச்
சிறை மீட்டு மாயையால் அவர்
சித்தத்தை மயக்கியவன்
முறையாகத் தமையனோடு
பெற்றோரை வணங்கி அவரும்
நிறைந்துள்ளம் களிக்கும் வண்ணம்
நிமலன் தன் மனம் சொல்வான்

"அன்னை தந்தை எமக்காகி
அவனியில் எமைப் பிறப்பித்தவரே – நும்
அன்பினை, அருமையை, அரவணைப்பை
யாம் அறிந்தோமில்லை
முன்னை முதல் முப்பருவ காலம்
முழுதும் கடந்து வந்தோம் – எங்கள்
முன் நிற்கும் தெய்வம் உமக்கு (யாம்)
முறையாய் இன்ப மளித்தோமில்லை

பால்யம் பௌகண்டம் கைசோரம் என்ற
பருவத்தில் யாமருகில் இல்லாததால் –உம்
ஆவி சோரச் சிறையில் எம்மை நீர் நினைத்திருந்து
அல்லற்பட்டீர் அதற்காக எம்மைப் பொறுத்தருள்வீரே

அவ்விளம் பருவத்தில்
உம் மடி கிடந்தறியோம்
அடிசிலில் எம் கரம் அளைய –நீர்
அன்னம் ஊட்டி உண்டறியோம்

இவ்விதமாய் உமைத் தவிக்க விட்டு
இருந்து விட்டோம் உமைப் பிரிந்து –ஈடு
இணையில்லா பிள்ளைக் கனி தரும்
இன்பம் தனை மறுத்து

ஒரு நூறு ஆண்டு யாம்
உலகில் வாழ்ந்தாலும்
உமக்கு நன்றி சொல்ல
அக்காலமதும் போதாது
சிறுமை நீரடைந்தீர் எம்மால்
சிறைப்பட்டுச் சிரமப்பட்டீர்
சிறுமைந்தர் (எம்) குறை பொறுத்து –அன்பிற்
சிறந்தவரே எமை ஏற்பீர்'' என

தேவகி-வசுதேவர் மைந்தரைத் தழுவி மகிழுதல்

அரிதுயில் கொள்ளும் மாயவன்
அவன் தன் மாயையால் –புவி
அறியாது மானிடராய் பிறந்து
ஆயருடன் ஆடிப்பாடி –பின்
அரசன் கம்சனை வதைத்து
அன்னை தந்தையைச் சிறைமீட்டு
அருமைத் தேவகி –வசு தேவரை
அன்புடன் வணங்கித் தம் உளம் கூற

பெற்ற தம் பாலகரைப் பெரு
மகிழ்வினோடும்
பெற்றதோர் புதையலென அன்பு
பொங்கிடும் உளம்குளிர
நற்றவ வசுதேவருடன் நங்கை
அன்னை தேவகியும்
முற்றிலும் மகிழ்ந்து பலராமன் முகுந்தனின்
உச்சி முகர்ந்து

சேர்த்து மார்பீதணைத்து
செங்கண்மால் சங்கர்ஷணனைப்
பார்த்துப் பார்த்து ரசித்து
பரவசம் மிகுந்தவராய்
தம் மடி மீது தாம் பெற்ற
தனயரை இருத்தி முன்பு
கம்சனால் தாமடைந்த
கஷ்டங்களைனைத்தும் மறந்தார்

தம் மடி மீது மைந்தர்
தாமமர்ந்திருக்க அவரைத்
தம் மகிழ்ச்சிக் கண்ணீரால்
தான் நீராட்டுச் செய்து
பெற்றெடுத்த பாசம் பெரும்
புயலென மனம் நிறைக்க
பேச இயலா நிலையிலவர்
இருந்தனர் தொண்டை அடைக்க!

*கண்ணன் பலராமன் உக்கிர சேனரைச்*

*சிறை மீட்டு அரச பதவி யளித்தல்*

அன்னையின் தந்தை முன்னாள்
அரசன் உக்கிர சேனன்
தன்னையும் சிறை மீட்டார்கள்
தாமோதரன், பலராமனும் போய்
பின் அவர் தாள் பணிந்து தம்
பிறப்பால் அவர் பட்ட துன்பம்
தன்னை அவர் மறந்து மீண்டும்
தாமே முடி சூட வேண்டும்

என்று அவர் மனம் கொள்ள
இனியவன் மிக இங்கிதமாய்
யது குலம் முன்னொரு நாளில்
யயாதியின் சாபத்தாலே

முடி சூட முடியாதென்பதை
முரளீதரன் விளக்கிக் கூறித் –தன்
அன்னையின் தந்தை போஜ
அரசராய் முடியேற்றருள

விண்ணப்பித் துரைப்பான் மேலும்
வித்தைக் கெல்லாம் வித்தாயானவன்
"கண்ணன் யான் உன் சேவகன் நீர்
கட்டளை யிடுவீர் எமக்கு எம்மோடும்
விண்வரோடு மண்ணவரும்
விரும்பிக் கப்பம் செலுத்தி என்றும்
இணங்கி உம்மை வணங்கி இருப்போம்"
என்றுரைத்து அவரை இசைய வைத்தான்!

கண்ணனும் பலராமனும் நந்தரைத் தழுவி
அவரைக் கொண்டாடுதல்

உள்ளம் உருக அன்பு உள் மனதில்
ஊற்றாய்ப் பெருக பலராமனும் கிருஷ்ணனும்
கொள்ளக் குறையா அன்பால் தம்முடை
குழந்தைப் பருவத்தில் அவர் தங்களை

அள்ளி யெடுத்து அணைத்துச் சீராட்டிய
நல்லவர் நந்தரைத் தழுவித்தாள் பணிந்து
வெள்ளமென வெகுவேகமாய் உணர்ச்சி
வெளிப்பட (மனமது) கசிந்து கரைந்து – கனிவாய்

"அப்பா எம்மை உம் உயிர் போல் எண்ணி
ஆதரித்திருந்தீர் உம் அன்புக்கிணையில்லை –எம்
அன்னை யசோதையின் அன்பு வெள்ளத்திற்கு
அணையிடும் சக்தி எமக்கில்லை யறிவோம்

மூவைந்து ஆண்டுகளாய்
முறையாய் எமை வளர்த்தீர் இன்று
முறை வந்தது நாம்
பிரிந்திடும் வகையாய்

ஆம் உண்மை தந்தையே எம்
அன்னையிடம் சொல்லுவீர்
யாம் இங்கிருந்தாலும் எம்
மனம் அங்கு உம்முடன் இருக்கும்.''

என்று சமாதானம் சொல்லி
இனிமையாய் அவருடன் இருந்து
நன்றாய் நந்தர் உடன் வந்திருந்த
நன்மனக் கோபரை உபசரித்துக் கோகுலக்
கன்றென வளர்ந்த கண்ணன்
அண்ணனோடு தந்தையின்
கழல் பணிந்து வெகுமதியளித்து
கனிவுடன் நந்தரை மகிழச் செய்தான்

யாதவர் முதலானவரைச் சொந்த நாட்டிற்கு வரச்
செய்து உக்கிரசேனனுக்கு முடி சூட்டுதல்

அஞ்சியே கம்சனுக்கு
அவன் நாடு விட்டொழிந்த
அந்தகர், மதுக்கர், குருரர்
அவரொடு தசார்ஹர் யாதவர்– விருஷ்ணி
அவரெல்லாம் மீண்டும் போஜ
அரசன் குடையின் கீழ் வாழ
அரியணை உக்கிரசேனன்
அமர்ந்திடும் வகையைச் செய்தார்

மீண்டும் தம் நாடு வந்தவரை
மிகுந்த மரியாதைகள் செய்து
யாண்டும் எங்ஙணுமே மகிழ்ச்சி
யாவருமடைந்து இன்புறும் வண்ணம்
காண்டற்கரிய மால் அழகன்
கருத்துப்படி மனம் களித்திடவே
ஆண்டனன் உக்கிரசேன மன்னன்
அச்சுதன் மீட்டளித்த நாட்டினை!

“பொன் அரியணை யமர்ந்த
போஜரே வாழ்க! வாழ்க!
மன்னவா வாழ்க! வாழ்க!
மக்களைக் காத்து வாழ்க!
பன்னெடுங் காலம் வாழ்க!
பல்வளம் பெருக வாழ்க!
விண் தொடும் புகழ் துலங்க”– என
வேந்தனை அவையோர் வாழ்த்த

தேவகி தன் மணி வயிற்றுத்
தேன் சிட்டிளம் சிங்கம் வாழ்க!
காளியனை வதைத்த கண்ணன்
கார்முகில் வண்ணன் வாழ்க!
பார்முதல்வன் உறு துணையாம்
பலராமன் பண்பே வாழ்க!
ஆயர்குல யசோதை நந்தர்
ஆய்ப்பாடி அமுதம் வாழ்கவே

எல்லோரும் வாழ்க நாரணன்
இணையடி தொழுது வாழ்க
பல்லுயிரெல்லாம் வாழ்க –தருமம்
பயிர் செழித்தோங்கி வளர்க
நல்லதை நடத்தும் நாதன்
நாரணன் அருளால் என்றும்
வல்லமை மிகுந்து வாழ்க
வளமெல்லாம் நிறைந்து வாழ்கவே!

“ஓம் நமோ நாராயணாய நம”

“ஓம் தத்ஸத் கிருஷ்ணார்ப்பணமஸ்து ஹரி ஓம்”

“ஓம் சாந்தி சாந்தி சாந்தி”

---